சாலிவயற்பயிறண்ணடைகொண்டான்
பாலியல்பின்றுபழித்துறைபூண்டான்
மேலியறீயவினைப்பயனெண்ணான்
மாலியல்சிந்தைமனோசவமன்னன். (௨0)

இக்கொடுவேந்தணிழைத்திடுபாவம்
பக்குவமாயபலத்தொடர்பாலே
யொக்கலின்மேதகுமேணநிலத்தான்
மிக்குறுகோலபவேண்டலனுற்றான். (௨௧)

கூன்றடவிற்பயில்கோலபனோடு
மூன்றிருதிங்கண்முயன்றமராறரு
மான்றுமனோசவன்வல்லையின்வல்லே
தான்றருகான்முளைதையலொடுற்றான். (௨௨)

தண்டியலூணதராதிபன்வெம்போர்
விண்டவனீள்வனமேவலுமன்னோ
மண்டலமாதைமணந்துவலத்தா
லெண்டருகாலமிருந்தனனிப்பால். (௨௩)

அச்சமில்கோலபனுண்டிடவைய
மைச்செறிகாட்சிமனோசவன்வாளா
வெச்சமுமில்லுமிளைக்கவிளைத்தே
பொச்சையினூடுபுகுந்தலமந்தான். (௨௪)

பொன்னுலகோமிசைபுக்கமுதியும்
வன்னமதிக்குலம்வந்தருள்கோமா
னின்னலுழுந்தனனெவ்வகையானும்
தன்னவையல்லதனக்குதவாவே. (௨௫)

நீணிலவாழ்வினைநீர்த்திரையென்றே
தேனுளதாவெணியின்புறலாமோ
மாணுயர்செல்வமனோசவனாக
மேணிலதாகியுணங்கியதென்றால். (௨௬)

குஞ்சரமெண்குதிராலரியேனம்
வெஞ்சினவேங்கைமிடைந்துறுகானில்
வஞ்சகனாமனோசவன்மற்றோர்
தஞ்சமிலாதுதளர்ந்துழியோர்நாள். (௨௭)

தோன்றல்பசித்தழல்சுட்டிடவாடா
வீன்றவரோடுமிளைத்தனனென்றா
னூன்றளர்செய்துயரொட்டலர்வாளாற
கீன்றெனமம்மர்கெழீஇயினரன்னோர். (௨௮)

ஆருயிர்மைந்தனகட்டழலாகு
மாரிவறந்தவயங்கெரிவேனி
னேரியவல்லியினின்றுளம்வாடும்
பாரிதன்னோடிறைபன்னியுரைப்பான். (௨௯)

மாதுசுமித்திரைமற்றிதுகேண்மோ
யாதினியாற்றுவதெவ்விடைசெல்வேற்
சாதலணைந்ததுசந்திரகாந்தற்
கோதுவதென்னினியுண்டியுமின்றால். (௩௦)

ஏக்கறுமிச்சவிடுக்கவொழித்தே
காக்குநர்வேறெவர்காசினியின்மேற்
பூக்கமலத்துறைபுங்கவனென்பா
னூக்கமிலெம்மையளித்ததையென்றே. (௩௧)

குன்றவில்லானடிகோவலனற்று
ளென்றுமுறாவிமையோரிவர்தம்மை
யன்றுபணிந்திலனவ்வினையாலே
யின்றடைகுற்றதகந்தையெனக்கே. (௩௨)

வெவ்வியயானெனன்மேவிடலாலே
வௌவினனந்தணர்வானவராஞோர்
செவ்வியமாண்பொருடவினையிற்றுற்
கவ்வையுழந்துகலங்கருற்றேன். (௩௩)

மாற்றலருள்கெனமாநகரீந்தேன்
பாற்றொடிநீதருபாலகரோடு
மாற்றருமூந்தியழற்பசிகூர
வீற்றொருவேன்வனமேவினனந்தோ. (௩௪)

நீரணிவேணிகிருத்தனைமாலே
வாரமனத்துணராமருளொன்றே
வாரணருண்ணவளித்திலனன்னம்
யாரிவணுண்டியெனக்கிடுகின்றோர். (௩௫)

கண்ணனுளத்தனுகாதகழற்கா
னுகர்ணிலவுந்திருவும்பரின்மேலாம்
வெண்ணிறநீறணிவேடமிலங்கும்
புண்ணியரேவல்புரிந்தறியேனால். (௩௬)

பாங்குறுவாழைபலாவிவைநல்குந்
தீங்கனிதண்டுசெருப்பலர்சாந்தம்
பூந்துடைவெள்ளிலைபொங்குதுவர்க்கா
யீங்கிவைநல்விரையேய்ந்தனமற்றும். (௩௭)

சித்திரையாகியதிங்களினேருஞ்
சித்திரைநாண்மறைதேர்ந்தவர்தம்பாற்
சித்திரகுப்தர்சிறப்புறவீயேன்
சித்திரமன்னசெழுந்தொடிநல்லாய். (௩௮)

ஆலரகத்தியருச்சுனமாதி
சாலநிழற்றுதருப்பதிகத்தோர்
மேலெறியாதபவெப்பமுறாதே
வாலியவட்டையில்வைத்தறியேனால். (௩௯)

காதினிலங்கியகட்செவியெம்மான்
மேதினியுண்டருள்விண்டுவிளங்குஞ்
சேதிமகீண்மதில்சேர்மணிமுன்றில்
சோதனிகொண்டுதுடைத்தறியேனல். (௪0)

ஏரிகுளங்கிணறிங்கிவைதாரோன்
காரிநுகர்ந்திருள்கண்டனைமுன்னோர்
சீரியகோயில்சிறப்பொடுசெய்யேன்
பாரில்வணங்கல்பழிச்சலிலேனல. (௪௧)

பூவனமொன்றுபுரிந்ததுகாணேன்
மாவனமாலவனத்தயல்போகேன்
றேவனைவிற்கெழுதிங்களினுறறேன்
மேவியபூசைவிடுந்திடுமுன்னே. (௪௨)

தாதையர்தாயர்தமக்குயர்கன்னி
மாதமுதற்கண்மகாளயமற்று
மீதுறுகாமனைமித்திகரித்த
மாதிசிராத்தமளித்தறியேனல். (௪௩)

ஒட்டிய[illegible]ங்களொடொன்றொருபான்மே
லிட்டளபக்கமிருங்குருமேவு
மட்டமியாதியறந்தருமநநாட்
பட்டினிகொண்டுபசித்தறியேனல். (௪௪)

நாலுமறைக்குணவின்றிடுநற்சா
பாலமுணாத்தபலனகெழுமோரோழ்
கோலமனுக்கொடுகோதிரிவெண்ணே
சாலவெனமேனிதரித்திலன்மன்னோ. (௪௫)

அநாதிநுதற்கணரன்பொறியைநது
மெனுவின்மனத்தினிருத்திய தில்லேன
பிறுகிதொழும்புபிறங்கியகண்டி
கனுவினுமெனமிசைகண்டறியேனல். (௪௬)

விண்டுவினுமம்விளம்புமெழுத்தா
மெண்டொகைமந்திரமெண்ணிலனீதோ
பெண்டொருபங்கிறைபேசியநூற்பா
லுண்டனவொன்றையுணற்றியதில்லேன. (௪௭)

புண்ணியமின்னவைபோற்றலிலாதே
நண்ணியதென்றிடர்நாடியினைந்தே
மண்ணில்விழுந்துமனேசவமன்ன
னுண்ணிகழ்போதமொழிந்துகிடந்தான். (௪௮)

தார்புனைகோனுடனுரணிமீதே
சோர்பொடுசாய்ந்துதுடிப்புறுமாற்றை
யேர்புனைமின்றிருவில்லவளென்னும்
பேர்பொருண்மாறுறுபெண்கொடிகண்டே. (௪௯)

சேற்றெழுசெயயசெழுங்குமுதத்திற்
றோற்றலிலாதசுரும்பிசைபோலே
வேற்றுணைநீர்வரவீழ்ந்தழுதேங்கிப்
போற்றியகேள்வன்மெய்புல்லினள்சொல்வாள். (௫௰)

சோமகுலேசதுளங்கொளிவீசு
மாமணிமார்பநின்மைந்தனொடென்னை
வேமெரிதில்லம்விடுத்தொருநீயே
போமதுகொண்டனைபுந்தியிலந்தோ. (௫௧)

ஆவொருவேன்மகனுமிவனோடுங்
காவலரின்றுழல்கன்றுடையான்போற்
றீவனமீதுதிரிந்திடுவேனோ
வாவுறுகிள்ளைமனோசவமன்னா. (௫௨)

கேளினைநீத்தகிலேசமலாதுன்
றோளையுநீங்குதுயர்க்கடன்மூழ்கிக
கோளரியஞ்சுகுலப்பிணையாகோ
வாளமர்தானைமனோசவமன்னா. (௫௩)

உன்னையுநீங்கியுலங்கெழுதோளாய்
பொன்னவிர்பூண்மணிபோக்கியதேபோ
லென்னையமங்கலையென்னவிசைக்குங்
கொன்னுமென்னுருயிர்கொண்டுறைவேனோ. (௫௪)

சுந்தரநின்னிருதோள்பிரிவேனோ
வந்தனன்யானுமனோசவவென்பா
டந்துறநேரிடைசந்திரகாந்தா
வுந்தையயர்ந்ததுணர்ந்திடுகென்றாள். (௫௫)

கண்டதுகான்முளைகண்புனல்சோரப
பண்டிகொழுந்துபசித்தழலோடுந்
தண்டலிறந்தைதனைத்தழுவுற்றே
விண்டொலியின்றிவிழுந்தழும்வேலை. (௫௬)

வேறு.

நெடியவேணியணிறணிமேனியனீங்காக்
கடிகொள்கண்டியன்கண்ணுதருள்புணர்கருத்தான்
படிமையாலுயர்பண்ணவன்பல்லுயிர்புரக்கு
மடிகளாகியபராசரனணைந்தனனங்கண். (௫௭)

உணங்குசாலிகண்டுதவியவெழுந்தகாரொத்த
குணங்கொண்மாதவக்குரிசிலைத்தெரிந்துதண்கோதைப்
பணங்கொளல்குலாள்பராசரன்பாதபங்கயமேல்
வணங்கினாளருண்மைந்தனுந்தானுமாய்மண்ணில். (௫௮)

சரணமேல்விழுந்தையறன்றுயர்த்தழல்சமிப்ப
வரணவாசிநீரருளினூற்றெளித்தளித்தறவோ
னிரணவேல்விழியாளைநீமதலையாரொவனோ
டிரணமாழ்குறுமிரவிபோற்கிடப்பவனென்றான். (௫௯)

வேலைவென்கொளுமெய்த்தவன்வினவிடைகொடுப்பான்
வாளைநேர்விழிமற்றவனென்மணவாளன்
காளைசந்திரகாந்தனெங்கான்முளைகதிர்கால்
கோளையாகியவம்புலிகுலேசனிக்கோமான். (௯௦)

வேந்தையீன்றவன்விக்கிரமர்ட்டியன்விருப்பான்
மாநதர்சொல்பெயர்மனோசவன்மலர்த்திருமடந்தை
காந்தனன்னவன்புலனிரண்டொருபொறிக்கவர்வோ
னேந்துமன்பதையிங்கெனைச்சுமித்திரையென்னும். (௯௧)

கோலபன்றனதுருவமாங்கொடுவினையகத்தான்
ஞாலமுந்திருநகருநாபதியிழந்தே
பாலனோடுமென்னோடுமிப்படாவிடரிதன்கண்
மாலுடன்புகுந்துற்றனன்மைந்தனிவ்வைகல். (௯௨)

பற்றிநின்றெரிபசியினுற்றன்முகம்பார்த்துத்
துறறிவேண்டுசொற்றுய்ப்பதறருதவுடுஞ்சொன்றி
யுற்றதன்வயிற்றழலிடையஞ்செவி[illegible]ளையா
லுற்றுவீழ்ந்துணர்வொடுங்கினனிறைவனென்றழைத்தாள். (௯௩)

[illegible]மித்நமீதெனுநெடுங்கணீர்சொரிந்திடநிற்குஞ்
சுமித்திரைக்கெதிர்சொல்லுவான்பராசரன்முருகாய்
கமித்துநினதுகளையெலாங்களைபங்கணத்தற்
சமித்துமோகமிங்கெழுவனோர்கலையிலுன்றலையன். (௯௪)

வாடுறேலெனமனநெகிழ்த்தரிவையையமன்று
ளாடுநாணிணைந்தருணுவனரசனதாக்கை
யூடுசன்கையாலொருமுறைதடவலுமுணரா
வீங்கொண்டெழீஇயிறைஞ்சினன்பராசரனினைத்தாள். (௯௫)

கழுமலத்தமிழ்ப்பிள்ளையார்காதலனீண்ட
வழுதிதீப்பிணிமாற்றியன்றுயிர்பெறுவளம்போ
லெழுதருந்திறன்மனோசவனிருந்தவன்பாதந
தொழுதுளங்கவர்களிப்பினுலவனொடுஞ்சொல்வான். (௯௬)

அறனிலாதவர்க்கரியநின்றரிசனமதனு
னிறனிலாவுயிர்நிலைகெடாதயர்வினைநீங்கித்
திறனிலாவுணர்வெய்தினனசேர்ந்தனன்வனத்தின்
மறனிலாவுவேற்கோலபமாற்றலன்வலியால். (௯௭)

சத்திதந்தருடனயநின்றனதருட்கடைக்கண்
வைத்திடாவிடினுய்கலன்மரபிதுவென்று
னத்துணைப்பொழுதஞ்சலென்றரசனையமைத்த
கைத்தலத்தினன்பராசரனருளினுற்கரைவான். (௯௮)

செல்வமன்னவகேண்மதிதெவ்வினைத்தெவிட்டி
மல்வளங்கெழுவாகுவின்வாகைநீமிலையு
நல்வரங்கொளுநடவையொன்றியம்புவனரலைக்
கல்வளம்பயில்கௌசலைகாளைதன்கரைமேல். (௯௯)

தானுவாழ்வரைக்கந்தமாதனந்தனிலுண்டோர்
மாணுறும்பெயர்மங்கலதீர்த்தமாம்வாவி
வேணவாவுலகடைந்திடமிநிலையிற்பிறந்த
யாணர்வல்லியோடிராமன்வீற்றிருப்பனுங்கென்றும். (௭0)

சேயுநீயுநின்றேவியுமாயவண்சென்று
பாயுநீர்த்தடமன்பினுற்படிந்ததன்பாரத்
தாயநற்பதிச்சிராத்தமுன்றனைவையமைத்தாற்
போயொழிந்திடும்பொருகொடிநெடுங்கொடிப்பூவை. (௭௧)

அண்ணலானனவம்புயமாலயமாக
நண்ணுமாமகணண்ணலன்றன்னையுநாசம்
பண்ணிநின்பழம்பதிபுகுவாயுனைப்பகரும்
புண்ணியம்புணர்பொருட்டினுற்போதுவன்யானும். (௭௨)

அல்லதீரியநம்மொடுமனைநின்றொன்றறவோன்
வல்லைமன்னன்முன்றேருடன்மங்கலதீர்த்தத்
தெல்லைநாடியேயேகுவானிருஞ்சுரம்போகித்
தில்லமும்பலதேசமுங்கடந்தவண்சென்றான். (௭௩)

மங்கலப்புனன்மரபினுன்மற்றவரோடு
மங்கலக்கணின்றகன்றிடவாடியேயருளாற்
றிங்கண்மூன்றளவிறைவனுற்சிராத்தமுஞ்செய்வித்
தெங்கணும்புகழ்பராசரனிருந்தசனனிதன்மேல். (௭௪)

நீரொழுச்தெனநெடுந்துயர்நீங்கிடவிராம
னேரொழுத்தினையரசனுஞ்செவித்[illegible]லையுரைத்தான்
போரொழுத்திகழ்புயத்தினன்புனலதிற்புகன்ற
சீரொழுதலைநான்கொருபதுநாண்முறைசெயித்தான். (௭௫)

அறைபுனன்மனுவரசனோர்பராசரனருளான்
முறையிலங்கெதிர்தோன்றினமுரண்கொள்கார்முகமுங்
குறையிலேமலிதூணியுங்குமுறுவெள்வளையு
மிறைசெய்தண்டமுமுசலமும்விளங்குமாடியமும். (௭௬)

பாகுநீள்கொடிபரியுடன்படர்நெடுந்தேரு
மீகையாலுறையிட்டகூர்நாந்தகமிரண்டு
மாகமார்தொடையாரமுமாயிரந்துகிலும்
வாகுசேர்மணிவலயமுமகுடமுந்தொடியும். (௭௭)

வைசயந்தியாம்பொன்மணிமாலையுமருவார்
கைசயந்தராதோடவெண்காண்பவன்கண்டே
யுய்சயந்தருமூழினுலுவகையுற்றோடி
மொய்சயநதனக்குதவிடுமுனியுடன்மொழிந்தான். (௭௮)

அங்கண்மன்னனைப்பராசரன்றனபிடேக
மங்கலத்தடநீரினுற்செய்தருள்வழங்கப்
பொங்குபூணொடுமெய்புகுங்கருவியும்புனைந்து
செங்கைவாளொடும்வில்லொடுந்தேர்மிசையேறி. (௭௯)

ஆங்காற்றியதூணியன்முதுகிடைச்சுமந்த
வோங்குபொன்முடிச்சென்னியனுச்சியிற்கதிர்போ
லாங்கண்மேதகவிளங்கினானரசனன்றவர்க்குப்
பாங்குசேரருட்பராசரன்பின்னரும்பரிவால். (அ0)

விரிஞ்சனாதியாவசுகமேலவுமதலுமளப
புரிந்துகோடலுமவயவப்பகுதியும்போற்றித்
தெரிந்திடற்கருங்கொள்கையாற்றிருவருள்செய்து
விரிந்தமாதவமேன்மையாலாசிகள்விளம்பி. (அக)

ஒன்னலன்றனைவென்றிகொள்போகெனவுரைப்பப்
பன்னரும்புகழ்ப்பராசரன்பங்கயபாத
மன்னனாகியமனோசவன்வலங்கொடுவணங்கிப்
பொன்னனாளொடுமாரனன்னாளொடும்போனான். (அஉ)

விண்ணியங்குதேரிரவிதன்மெய்ந்நிழலேய்ப்ப
மண்ணியங்குதேர்மனோசவன்வளநகர்மருங்கிற்
கண்ணனம்புயக்கண்படுங்கடலெனக்காத்தி
லொண்ணிறங்கொள்வால்வளையினையூதினனுரப்பி. (அங)

கூற்றுவந்தமையுணர்ந்திடக்குலிக்ககாகளம்போ
லேற்றிடுஞ்செவிக்கோலபன்பாரொலிடுக்கண்
டோற்றுநெஞ்சினன்படையொடுமகிற்புறந்தோன்றி
யூற்றமோடுறுமனோசவற்கண்டமருழந்தான். (அச)

மூட்டுபோரெதிர்மூன்றுநாண்முயன்றபின்முன்னங்
காட்டிலோடியகாவலன்கார்முகங்குனித்துப்
பூட்டிநான்முகப்புங்கவன்பொருசாம்போக்கிக்
கூட்டுதானையுங்கோலபனாவியுங்கொண்டான். (அரு)

மருவலானுயிர்மாய்ந்தபின்மனோசவனொன்னார்
செருவலான்றனதணிநகர்சென்றுடன்றெரிந்தா
லருவலாவிடையவள்சுமித்திரையொடுமமர்ந்தா
னுருவலாநடைவருடமோராயிரமுவப்பால். (அசு)

அற்றைநாண்முதலகந்தையும்பொருமையுமகற்றிச்
செற்றமின்றிநன்றுயிரெலாம்புரந்துதன்சேயைச்
சொற்றவாண்டவைசென்றுழிமணிமுடிசூட்டிப்
பிற்றையிற்றுறந்தேகினான்மதிக்குலப்பெருமான். (அஎ)

தேவிபின்வரமுன்புபோற்சேதுவைச்சேர்ந்து
வாவிமங்கலப்புனல்படிந்ததன்கரைமருங்கி
லாவியுள்ளுறைசதாசிவத்தண்ணலையறிவான்
மேவிநாள்பலகழிந்தபின்மனோசவவேந்தன். (அஅ)

சட்டகந்துறந்தெம்பிரான்சிவபுரஞ்சார்ந்தான்
மட்டுவார்குழன்மண்படுமனோசவற்றழுவிப்
பட்டவிந்தனச்சேக்கையிற்பள்ளிகொண்டெழாளாய்ப்
பொட்டுவாணுதன்மனைவியுமப்புரம்புகுந்தாள். (அகூ)

வேறு.

செருவினிற்பகைவென்றுலகேத்தவேசிவபுரத்தையடைந்திடவேற்றமார்
நிருபனுக்கருடந்தமைகேட்டிரானிலவுமுத்தியுமின்பமும்வேட்டுளோர்
மருவுமுத்தமமங்கலதீர்த்தநீர்மனம்வருத்தியுமன்பொடுமாற்றிலா
விருபிறப்புடையந்தணிர்போற்றுவாரிருவினைக்கிரிநுண்டுகளாக்குமே. (௧0)

மங்கலதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௧0எ.

---

# அமுததீர்த்தச்சருக்கம்.

---

வேதங்களைகண்டுவகுத்தவியாதனென்பான்
பாதங்கணினைந்துபணிந்துயர்பண்பினீடுஞ்
சூதன்பெருநண்பொடுபின்னருஞ்சொல்லுகின்றா
னேதந்தவிர்மாதவர்தங்குழுவின்பமெய்த. (௧)

மாகாந்திவிளங்கெழின்மங்கலவாவியின்கண்
மோகாந்தகரூரமுடிவெய்திடமூழ்குநல்லோர்
பாகாந்தகைமென்மொழிப்பங்கயப்பாவைசேரு
மேகாந்தராமநகரத்திடையேகுவாரால். (௨)

நாலார்கதியாருமிருக்கருணல்கநாளுஞ்
சேலார்நயனத்திருச்சீதையுநானுமாகித்
தோலாதவிலக்குமன்வாயுவின்றோன்றன்முன்னும்
வாலார்நரர்சுற்றவிராகவன்வைகுமங்கண். (௩)

மின்றாருடலிற்றிரைவெண்ணரைவீவுநீக்குந்
தென்றாரமுதத்தடமென்றொருதெய்வவாவி
யந்நீணகரத்துளதீசனதாணையாலே
மன்றாதரவிற்படிவாருயிர்மாய்ந்திடாதால். (௪)

அற்பாலமுதத்தடமூழ்கடியார்களுக்குக்
கற்பார்மரணப்பெயர்க்கட்டினைநீக்குபாக்கு
நற்பான்மையதன்கரைநண்ணுவனாளுமுக்கட்
பொற்பாருமையம்பிகைதோள்புணர்பூதநாதன். (௫)

அவ்வாறுரையாடியசூதனையன்பினோக்கி
வெவ்வாதிகல்வென்றிகொள்வேதியர்மேன்மையாதோ
வெவ்வாறமுதத்தடநாமமியைந்ததென்றார்
செவ்வாறுணர்வார்க்கவனம்முறைசெப்புகின்றான். (௬)

ஆறாவமுதத்தடநாமமமைந்தவாறு
மாறாவதனீர்மையுமற்றும்வகுத்துரைப்ப
னூறாருயிர்வேறுணர்மாதவிருண்மைதேர்மின்
மேனாளிமையாசலமேவியசாரலின்கண். (எ)

நிலையாயுளாரணநீதியினீடுவாய்மைக்
கலையார்புலமைத்துறைகண்டவன்காமமில்லா
னலையாழியடக்கியவங்கையருந்தமிழ்த்தென்
மலையாசலமாதவர்கோனுடன்வந்தமேலோன். (௮)

எக்காலமுமுத்தியைவெஃகியிருங்கடற்க
ணக்காலமிருண்டெழுமாலமயின்றவன்றன்
முக்காலமுமர்ச்சனைமுற்றுபுதொண்டருக்கு
மைக்காரடவிப்பயனுண்டிவழங்கியன்பால். (௯)

தாவாவிருபானொருநான்கெழுத்தானமைந்த
வோவாமனுவாகியமந்திரமுன்னியின்பான்
மேவாதரவாலுயரைவகைவேள்வியாறறி
நாவார்மறையோதிலங்கெழுநூல்களாய்ந்து. (௧௦)

பிரமப்பொழுதத்திலெழுந்துபிரானையுன்னி
வாமூற்றிடுவிப்பிரர்வேதவழக்கினூற்றுங்
கிரமத்திடையொன்றொழியாவகைகேண்முமற
சிரமத்தினையின்றியுஞற்றுசிறப்பினீடி. (௧௧)

மூண்[illegible]கியொர்மூன்றுமுறைப்புரிமொய்ம்பின்மல்கி
யாண்டின்வரையீன்றவர்தங்கள்சிராத்தநல்கி
வேண்டும்பரிசேனவுமேதகவோடுமிக்குப்
பூண்டங்கருணன்னெறியிவ்வகைபோற்றுநாளில. (௧௨)

ஓராயிரம்வற்சரமாகியுமும்பருய்யக்
காரார்விடமுண்டருள்கண்ணுதனல்கல்காரணன்
வேரார்பசையுண்டெரிவெம்முதிர்வேனிறன்னிற
பாரூடிடமாரடிநுண்விரல்பற்றவூன்றி. (௧௩)

நின்றங்கலையாவகையைந்துநெருப்பிணுப்ப
ணென்றங்கிருகண்கொளவங்கையெடுத்துநக்கன்
பொன்றங்கடியல்லதுசார்பிலன்போற்றினுறு
லன்றங்கருமாதவமாயிரமாண்டினெல்லை. (௧௪)

செல்லார்மலயத்தவன்பின்வருசெம்மலாகு
நல்லானிதுசெய்வுழிநாரியொர்பாகமாகி
யெல்லாவிமையோர்களுமேத்திடவேறுகைத்துக்
கல்லானிழன்மேவியகண்ணுதல்கண்முனின்றான். (௧௫)

அப்பெற்றியினேர்படல்கண்டவருந்தவத்தோ
னெப்பெற்றியினோர்களுமெய்தருமெந்தையெம்மா
னொப்பெற்றியசுந்தரமேனியுவந்துநோக்கி
மைப்பெற்றிருள்கண்டனைவாழ்த்திவழுத்துகின்றான். (௧௬)

எரிநேத்திரமிந்துவெழுங்கதிர்நோக்கமென்னுந்
திரிநேத்திரதிங்கண்மிலைச்சியசென்னிமன்னு
வரிநேத்திரவம்புயமார்கழலண்ணன்மஞ்சார்
கிரிநேத்திரமாமுமைகாதல்கினைத்தகேள்வா. (௧௭)

கோளால்வருகூற்றையுதைத்துயிர்கொண்டவென்றித்
தாளாகனகச்சிலைதாங்கிவளைத்தெடுக்குந்
தோளாவயனுச்சிதுமித்தவுகிர்ச்சுடர்க்கை
வாளாவினையூழ்முறைநாடிவழங்குவள்ளால். (௧௯)

அளவின்றிநெருங்குசராசரமாகியெங்கு
முளவென்றிடுமாருயிருக்குயிராகியொன்றுங்
களவென்றெவர்காண்பவரன்றவர்காணநல்கும்
வளவென்றிகொள்போர்மழுவாட்படைவானநாதா. (௧௧)

உழையேந்தியகைத்தலபூண்முலையொண்டழும்போ
டிழையேந்தியமார்பகவேடுவனிட்டபச்சைத்
தழையேந்தியசேகரசங்கரதன்கரத்திற்
கழையேந்தியவேளுயிர்வௌவியகண்ணினனே. (௨௦)

நேசங்கெழுதொண்டர்கணெஞ்சகநீங்கல்லா
வாசங்கெழுபூரணஞானம்வயங்குசோதி
நாசங்கெழுநான்முகன்வெண்டலைநாமமாலைத்
தேசங்கெழுமூர்த்தமிலங்கியதேவதேவே. (௨௧)

நாணுதயனோடரிதங்களினுதரென்றே
வீணுதரவுற்றிகலாடியவேட்கைதீரத்
தூணுர்பதுமத்தனிமாமணித்தோறறமென்னச்
சேணுடுகடந்துவிளங்குஞ்சிவக்கொழுந்தே. (௨௨)

அற்றம்பலவாயினுமன்புடையார்கடம்பாற்
குற்றம்பலமாகியிடாதருள்கோதிலானே
யுற்றம்பலர்கண்முகிழாதவருள்ளமன்றிச்
சிற்றம்பலமீதினுநாடகமாடுசெல்வா. (௨௩)

கனிகந்தறுகர்நதமர்காதலின்மாதவத்தோ
ரணிகந்தொழுதண்கயிலாசவடுக்கலானே
வனிகந்தவகன்றரவானநிவந்துவெஞ்சூர்
முனிகந்தனைமுநதொருதநதனையீனறமுத்தா. (௨௪)

ஆய்வாருவோடுருவன்றியகண்டமாகி
மாய்வாருடலென்பணிமாலைவயங்கவாடற
பேய்வாழ்சுடலைபயில்பிஞ்ஞகபேதைவாழ்க்கை
யோய்வாருயிருண்டவர்பேரறவோங்குமூர்த்தி. (௨௫)

ஒன்றேயெனிலங்ஙனமோதியதொன்றுகாட்டி
யன்றேயெனிலொன்றனிலாகுதியாரளப்பார்
குன்றேயருண்மூனறுகுணத்தகுணங்கடந்த
நன்றேயுனையாளுதிவேண்டலன்ஞாலவாழ்க்கை. (௨௬)

பொன்னங்கழல்வாரிசநாண்மலர்போற்றிபோற்றி
யென்னுஞ்புனையெங்ஙனமெய்திடுமென்னலோடு
முன்னின்றருண்மூவிலைவேற்படைமுக்கண்முன்னோர்
றன்னன்பனையன்பொடுநோக்கினன்சாற்றுகின்றான். (௨௭)

வேறு.

அத்திரிராசமித்தவகத்தியன்பின்னர்விந்தோய்
முத்திநீவேட்டதாயின்மொழிவதோருபாயமுண்டால்
மைத்திரனுலாவுங்கந்தமாதனவரையில்வீரா
தத்தியதரங்கம்வீசுநதடநெடுஞ்சேதுவின்கண். (௨௮)

மாவிருப்புற்றுவாழுமங்கலவாவிப்பாங்கர்
பூவிருப்புற்றசெல்வப்புனிதநீருள்ளதொன்று
நீவிருப்புற்றமுத்திநிலைதருமதுவேயன்றித்
தேவிருப்புறநீவீடுசேர்வதற்கெளியதின்றால். (௨௯)

செய்யநீருண்மையாமுஞ்செப்புதல்வல்லேமல்லே
மையுறேலதன்கட்போதியருஞ்சிறைநீக்குவாயேன்
மெய்யிதுபுரிதியென்றுவெள்விடைவெற்புகைத்து
வையிலைக்கழுமுளேந்தும்வானவன்மறைந்துபோனான். (௩௦)

புனையிழைபாகன்மாற்றம்புண்ணியமுனிவன்கேளா
வினையதுசெய்வலென்றுவிலங்குமேகாந்தராமந்
தனையணிசெய்வதாகித்தனிகரின்றிருந்தன்பா
னனையுநர்க்கின்பமீயுநற்றடமதனிலுற்றான். (௩௧)

வருடமோர்மூன்றுமற்றவ்வாவியின்மாபிருடி
யருடருநாலாமண்டிலருந்தவன்சமாதியுற்றுத்
தெருடரும்பிரமநாடிச்சென்றிடச்செலுத்திக்காலைப்
பொருடருஞ்சென்னியேற்றிப்போக்கிமெய்வீட்டிற்புக்கான். (௩௨)

கடமுனியிளவறன்பக்கடுப்பெறுங்கட்டுவிட்டு
மடமுனிநித்தமுத்திமருவலால்வழங்குவார்க
டடமிஃதமுதவாவிதானெனத்தனிமெய்ஞ்ஞான
நடமுதல்வீடுபெற்றோர்நாசமின்றிருந்தலாலே. (௩௩)

மனமடிவின்றிமூன்றுவற்சரமமுதவாவிப
புனல்குடைந்தாடுவார்பாற்பொருந்திடுமழிவிலாமை
நனியிதுசாதமென்றுநல்லருட்சூதனுண்டே
ரீனமுனிக்கணங்கள்கேட்கவினிதருள்செய்தானன்றே. (௩௪)

தன்னைவல்வினையினோடுதலைவனைத்தகையிறந்தோர்ந்த
நன்னயமுனிவர்சூதனைகைமுகநளினநோக்கி
யுன்னைநன்றிறைஞ்சினோமேலுரைத்தியேகாந்தராம
மென்னவிந்நகர்க்குப்போவந்தெய்தியநிமித்தமென்றார். (௩௫)

இசைதருகின்றான்சூதனெல்லொளியிராமனென்னும்
தசரதன்மதலைதானுந்தம்பியுந்தபனன்சேயும்
வசையில்வீடணனுமாண்டமாருதியவனுந்தொக்குக்
குசைநெடுஞ்சயனந்தொட்டுக்குரங்கினாற்குரம்பொன்றாக்கி. (௩௬)

சானகிதன்னையுன்னித்தசமுகத்தரக்கற்கோறற்
கானகாரியங்கள்செய்வானணிருந்தாயும்வேலை
மீனமார்தரங்கவேலைமிக்கெழுகுணப்பினுள்ளே
தானடங்குற்றுத்தம்மிற்சாற்றியமாற்றங்கேளீர். (௩௭)

ஆயினரவையினுள்ளோரஃதுணர்ந்தடலிராம
னேயெனச்சீறிவல்லேயிருபிருகுடிமுரிப்பா
லோயெனக்குறிப்பினுர்க்குமுதநிதியைநிறுத்தானத்தான்
மேயதேகாந்தராமவிழுப்பெயரப்பதிக்கே. (௩௮)

பூணுலாந்தோளயோத்திப்புரவலனுணைபோற்றிச்
சேணுலாந்தரங்கமின்றிச்செழுங்கடலமைந்ததன்மை
காணலாமின்றும்வீரர்கற்பனைகடக்கலாமோ
மாணிலாவெளியசங்கமரீஇப்பெரும்பயமுற்றோற்கே. (௩௯)

வேறு.

நியதியோடமுதத்தடமூழ்கியேநிலவுகோசலைபுத்திரனுதியோர்
பயிலுவாரைவழுத்தினாதாமெலாம்பரமபோகபதத்துணைமேவுவார்
பெயர்விலாநிலைபெற்றிலர்மாலுளார்பிரமஞானமனத்திலரானுடே
லுயருமாதரவிற்படிவார்களேலுதகமீதவருக்கருளீயுமே. (௪௦)

அமுததீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௧௪௭.

---

# பிரமகுண்டச்சருக்கம்.

---

பண்பெருகுமாதவர்பணிந்தினிதுகேட்பக்
கண்பிறழ்வில்சூதமுனிகட்டுரைசெய்கின்றான்
மண்புகழுமாரமுதவாவியதன்மாடே
யொண்பிரமகுண்டமெனவுள்ளதொருநன்னீர். (௧)

ஆரமுதவாவியிடையாடினரிராம
னேருமுறைமந்திரமுவந்துநிலைபோற்றி
வீரமலியைந்துபுலவேடரைமுருக்கிப்
பேருணர்வினுவேவர்கள்பின்பிரமகுண்டம். (௨)

வீங்குகந்தமாதனவிலங்கலதனுடே
தேங்குதிரைமுத்திலகுசேதுவதனுப்ப
ணோங்கிவருநல்குரவினுக்கொருமருந்தா
யாங்கதுவிளங்குமுலகத்தனையுமேத்த. (௩)

அன்றியஃதாயுமறையந்தணர்கடம்மைக்
கொன்றவினைகோடிபலகோடிதுகளாக்கு
மன்றவதுதுண்டளவில்வல்வினைகளெல்லா
மொன்றொழிவதன்றியழிவுற்றகலுமொல்லை. (௪)

கோகனகமார்பிரமகுண்டமதுகண்டோர்
சேகுறுதவங்கவிகைதெள்ளுபுனலாடல்
யாகமிவையெண்ணிலவிழைத்தடைவதென்னே
போகுமொருகான்முழுகினோனரிபுரத்தில். (௫)

கொற்றமலிசீர்பிரமகுண்டமதில்வெண்ணீ
ணெற்றிமிசையாரொருவரிட்டவர்கலைத்தே
மற்றவர்வயத்தினிலைவாரயனுமாலும்
வெற்றிபுனைவெள்ளைவிடைவேணிமுடியானும். (௬)

கொத்தவிழ்மலர்ப்பிரமகுண்டமணிநீற்றான்
மத்தகமிலங்குதிரிபுண்டரமலிந்தோர்
முத்தரிதிலையமிலைமுன்னுபரமாணு
வத்தனையதிற்புனைகுவாரமலராவார். (௭)

கொங்குலவுதண்பிரமகுண்டமதினீற்றா
லங்கமறையப்புனையுமன்பரவர்பேற்றைச்
சங்கரனளந்துரைசெய்தன்மையுடையானோ
விங்கிதிலனோவிரண்டுமெண்ணமுடியாதால். (௮)

குற்றவுடலைப்பிரமகுண்டமதினீற்றான்
முற்றுமறையார்நுதன்முயங்கவணியாதா
ரற்றுநலமாரவுரவத்தினிடையாழ்வா
ரொற்றபனனம்புலியிரண்டுமுளவெல்லை. (௯)

இந்தமணிவெண்டுகளிருக்கவொருநீற்றைப்
புந்திபுரிவோர்களொருபோதுமணியாதார்
நிந்தைகுறையொப்புமைநிகழ்த்துமவர்சோர்வில்
வந்தவொனத்துணிவர்மானமுணர்தக்கோர். (௧௦)

குவ்வுதவுகோன்பிரமகுண்டமதில்வெண்ணீள்
சைவநெறிவேதியந்தமக்கருள்செய்யோரா
லிவ்வலயஞாலமுழுதீந்தமரபிறரு
லவ்வகையிலோர்சிறிதுமையமிலையம்மா. (௧௧)

இம்மெனநெடுங்கரமெடுத்துரைசெய்கின்றேன்
மெய்ம்மையிதுமெய்ம்மையிதுமீண்டுமிதுமெய்ம்மை
கொய்ம்மணமலர்ப்பிரமகுண்டமுறைநீறதைத்
தம்மையுணர்மாதவிர்தரித்திடுமினீரும். (௧௨)

மாறில்கந்தமாதனவரைக்கணிறைசாபம்
பாறவிமையோர்களெதிர்பங்கயனிழைத்தான்
வீறுபலவேள்விகள்விதிப்படிவிளைத்த
நீறிஃதவ்வாவிகுடைவார்விமலராவார். (௧௩)

தொன்மையிதுசூதமுனிசொல்லியிடுமெல்லை
புன்மைதவிர்மாதவர்புகன்றுவிடைகொள்வார்
நன்மனவியாதனருணம்பியையவழுத்தா
வன்மைபுரிசாபமதுவந்தவகைகேட்பார். (௧௪)

மேதினிபடைத்தருளும்வெண்ணிறமடந்தை
காதலனையாதுகுறைகண்டிறைசபித்தா
னேதமிகுசாபமஃதென்னமரபிற்றோ
சூதவருளென்னவவனுள்ளபடிசொல்வான். (௧௫)

முன்புமறைமூண்டகன்முகுந்தனிவர்தம்மின்
மன்பதைபுரக்குமுதல்வள்ளலொருவன்யாஞ்
பின்பிறரிலென்றிகல்பெருக்கியெதிர்பேசி
யன்பறமுரண்டனரமுக்குடைமையாலே. (கசு)

வேலைபதின்மின்மினியிரண்டுடன்வெறுக்கும்
காலையுதயந்தருகதிர்க்கடவுள்போலு
மாலையிருதாரகைமனப்பகைகொளுங்காற்
பாலையுறழ்வெண்மதிபடாந்தசெயல்போலும். (கஎ)

வேள்விருவோர்தமில்வெகுண்டமர்தருங்கா
லாளுமனுவேந்தவணடைந்தமுறைபோலுந்
தாளுடையிரண்டுதகாதம்மிலமராடு
நாளிலொருபோரிடபநண்ணியதுபோலும். (கஅ)

மாயனொடுவாரிசன்மதர்ப்புமதிமாழ்க
வாயவாதமக்கறிவுமன்புமுளவாகப
போயளவிலண்டமிசைபொங்குதழல்வண்ணத்
தூயசிவலிங்கவொளிதோன்றியதுமுன்னர். (கக)

ஏமமுதலாளியையிகந்திருவர்காப்போர்
தாமொருவர்வவ்வும்வகைதம்மிலிகல்காலைச்
சேமநிதியாளனிடைசேர்ந்தனையதெய்வத்
தாமவருண்மேனியதுதனையவர்கண்டார். (உ0)

கண்டதிசயத்தொடொருகாட்சியினினைத்தார்
தொண்டுடைமுதற்பரமசோதியெனவெண்ணார்
கொண்டுளமருட்கைகிளைகொண்டெழுதலாலே
மிண்டுடனகந்தையும்விடுத்திலரிசைப்பார். (உக)

அண்டரினமக்கதிகராயினவரின்றல்
விண்டொழ்ருமைபபவர்கண்மேன்மையிவர்பாலென்
றெண்டகரவீறுமிதுவேயவ்ளக்குந்
தண்டமுநிறுக்குமிருகட்டுறுதராசும். (உஉ)

ஆதியிஃதந்தமிஃதென்னவரிதாகி
வீதிதருதேரிரவிவேறுபலகோடி
தீதிரளுறும்படிவுசின்னமுறவீறுஞ்
சோதியையளக்குமிதுவேநமதுதோற்றம். (உ௩)

என்றுமிருபித்தரஃதெய்திடுமுன்னெஞ்சத்
தோன்றியமறைப்பழுதுரைத்திடுதல்போலே
யன்றைவரைதூரம்வெளிவிடாதுளமடக்கும்
புன்றலைமைவானவர்புலங்கொளவகுப்பார். (உ௪)

தேவரிதுகாண்கவெனமெய்ப்பொருடிரிந்தார்
மேவுகிலரையமும்விகற்பமனமுற்றார்
யாவரிதனீறுமுதலெண்ணியளவிட்டா
ராவரவரேபிரமமாகுமுதலென்றார். (உ௫)

செந்துகிரினைக்கரிதுதேரில்வெளிதென்றே
யந்தரிருவோர்தமிலளந்திடுதல்பேரிலே
யிந்தவுருவெண்ணரியதெண்ணவெளிதென்னுந்
தொந்தவுணர்வின்றவர்துணிந்தவழிவேதன். (உசு)

காட்டியிதுவென்னுரைசெய்கட்டளைகடந்தே
மோட்டழலுருக்கொடெழுமூர்த்தியைமுகுந்தா
வோட்டரியதாளளவுகோடிமுடிதன்னை
நாட்டியுணர்கிற்பனிவனென்னநவின்றான். (உஎ)

சாகரநிலக்குரியதாதையுரைகேளா
மாகரமமைத்தவனைமாயனிசைவுற்றுச்
சேகரமதெண்கணதெரிந்திடுதியென்றே
சூகரவுருக்கொடுசுடர்ப்பதமளப்பான். (உஅ)

கோடுகொடுமண்பிளவுகொள்ளமிசைகுத்தி
யாடரவுசேர்பிலமடங்கலுமகழ்ந்தே
யோடியலமந்துமயலோடளவில்கால
நேடுபுதிரிந்தனனிலைப்படவிலாதே. (உகூ)

[illegible]ந்தளுலகத்தவர்கள்பன்றியிஃதொன்றிங்
காய்ந்திடுமழற்படிவமாமிதனையன்றே
சாய்ந்ததுடற்றன்னடிதளர்ந்ததுமிகத்தா
ழேய்ந்ததுளமென்னிதனையுன்னியழல்கூரும். (௩0)

ஆனசெயலில்லதையமைந்தலரிதாளு
ஊனமுளதோவஃதொழிந்திடவொருதோ
வேனம்வறிதேயலைவதென்னெனமுகுந்தன்
றானுணரொணாதவகைதன்னினிவுற்றான். (௩க)

விட்டனனகந்தையும்வியப்பொடுமசர்ப்புஞ்
சட்டெனவெழுந்தமராங்களையடைந்தே
யெட்டரியவென்பதையிகந்தனைநாடிப்
பட்டதுயர்போறமடிபார்க்கவரிதென்றான். (௩உ)

வன்னிவடிவாயமுதல்வண்ணமுடிகாண்பா
னன்னவடிவாகியயனண்டமிசைபோகிப்
பன்னரியநாள்பலபறந்துதடுமாறி
யுன்னரியதாயுரனொழிந்துவிழுகிற்பான். (௩௩)

மாலுமடிகாணலிலன்மற்றதுதெரிந்தான்
போலவமரேசரொடுபொய்சொலினுமொப்பா
மேலவஃதின்றெனினுமியாமுயர்வமென்னுக்
கோலியதொர்வஞ்சமதுநெஞ்சினிடைகொண்டே. (௩௪)

சீதரனெடும்பருயர்சென்னியுணர்சேணிற்
போதலிலவொன்பதொருபுன்மைதணையாகச்
சோதியிதனீண்முடிதுணிந்தனனியானென்
றோதினனுளங்கொள்படிமுற்றிடுவதோரான். (௩௫)

தாடலையிரண்டின்முடிதானயனுணர்ந்தா
னாடிமிவனைத்தனதுநாபியினளித்தோன்
றேடலிலனோவடிதெரிந்துணர்வதுண்டென்
றாடகிலத்தவருமையுறவினின்றார். (௩௬)

அடிக்களவையுற்றிலதகழ்ந்துபிலமெங்கு
நொடிக்கிலிவனென்னினமிகநோன்மையுடையானோ
முடிக்களவையுற்றதெனமுண்டகமிருந்தோன்
வடிப்பதெனமாயமெனமாயனுமருண்டான். (௩௭)

புன்னிலைதருங்கொடியபொய்யிதுபுகன்றே
மென்னிலையதாகுமெனவெண்ணியயனேங்கு
மந்நிலையழற்படிவினின்றுமருளாலே
தன்னிலையளப்பரியதாணுவெளியானான். (௩௮)

வேறு.

துளங்குமிளம்பிறையொளிரச்சுரநதிவெண்டிரைவீச
விளங்குமரனடிவிருப்பவிமையமயிலிடங்கொள்ளத்
தளங்கொணறுநதுணரிதழித்தார்மார்பனறனிவிடைமேல்
விளங்குதலுமிருவோரும்வெள்கிமுகங்கவிழ்ந்திட்டார். (௩௯)

புத்தேளிர்கணந்தொழுதுபோற்றிசைப்பப்புண்டரிகன்
பித்தேறுமுகந்தெரிந்துபிறைமவுலிமுறுவலுடன்
போய்த்ததேசொற்றனையெம்முன்பூசையுனக்கெஞ்ஞான்றுந்
தத்தேறுந்திரைத்தரணிதனிலிலதாகெனச்சபித்தது. (௪0)

நெடியவனைமுகநோக்கிநீசரதம்புகன்றமையாற்
படியவர்நின்பாற்புரிகபரவுபெரும்பலியெனலு
மடிதொழுதுமலர்விரிஞ்சனளவிலருட்பெருமானே
கொடியபிழையொன்றுமுளங்கொண்டுபொறுத்தருளென்றான். (௪௧)

நம்பனயன்றுயர்க்கிரங்கிநல்லருள்கூர்ந்தெமதுமொழி
வம்புபடாதுயர்கந்தமாதனத்தின்மருங்கேகித்
தம்பநெடுந்தழற்சாலைசமைத்துமகம்பலதந்தாற்
செம்பதுமத்தவதீருஞ்செப்பியபொய்ப்பாவமெனா. (௪௨)

பருவமுகிற்படாம்போர்த்தபனிமலையின்மிசைவளர்ந்த
தருணமலர்க்கொம்பினொடுந்தவளமதிதவழ்மவுலிச்
சுருதிதொழும்பரன்கரந்தான்சொன்னமுறையிழைப்புதனைக்
கருதியயன்காகுத்தன்கண்டகரைவரையடைந்தான். (௪௩)

அக்கிரியிலமரர்முனமாயிரமெண்பஃதாண்டு
மிக்கபவுண்டரிகமுதல்வேள்விகளாலருச்சித்தா
னக்கனையங்கெதிர்தோன்றிநாயகனுநான்முகற்குப்
பொய்க்கிளவிப்பவம்போக்கிப்புனிதவரம்பலதருவான். (௪௪

உருவதனிற்பூசையிலையுயர்சுருதிமிருதியினாற்
றிருமறையோர்பாவனையாற்செய்கவினைவழிபாடு
கிருதவிதுசெய்யுமிடங்கிளருலகமொருமூன்றும்
பிரமகுண்டமெனப்பெயராய்ப்பிறங்கியறங்கொடுத்திடுமால். (௪௫)

கீழிழைக்குமகத்தடத்தினீர்படிவார்க்கருண்முத்தி
வாயிலிற்றாள்கழலுமத்தகத்திற்பொடிபுனைவா
ரேயெனமைப்படலமிரித்தின்புறுவரிடுவதில்லா
னுரையமணம்புணர்கொழுநன்றனக்குதித்தான்றனல்லன். (௪௬)

ஆரொருவர்குடைந்தாலுமயுதபஞ்சபாதகம்போஞ்
சேரவனுகாவலகைத்திரள்பூதமெனவருளி
யீரும்முழுவினன்மறைந்தானென்றமவனுறைந்தார்கள்
காருறுகந்தரன்மகிழுங்கண்ணணவிண்ணவர்பிறரும். (௪௭)

வேறு.

மரபிலங்கிமுடித்தயனூரிலேவனிதைபங்கனருட்கொடுபோயினான்
பரவுமன்றுதொடுத்திமையோர்கடாம்படிவரங்கண்மகச்செயல்பேணினார்
கரவுசஞ்சலமுற்றவுனூறியேகதிவழங்கும்வழுத்திடயாருமே
பிரமனன்பினிழைந்திடும்வேள்வியாறபிரமகுண்டமெனப்பெயரானதே. (௪௮)

பிரமகுண்டச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௧௧௬

# அனுமகுண்டச்சருக்கம்.

காலாரணநிலையிட்டவனல்குங்கிளர்சூத
னூலாருரனுடையார்முகநோக்கற்றனனுவல்வான்
கோலாகலவண்டார்விதிகுண்டங்குடைவுறரோ
வாலாவிறலநுமானருள்வளர்குண்டமதடைவார். (௧)

செருமாறெழுங்கிருதத்திரள்சிதறப்படைபொருநீத
கருமாமுகில்வண்ணன்மீண்டிடுகாலைக்கிளர்கநதப்
பெருமாதனவரைமானவர்பேசும்பெயர்தனதா
வொருமாதடமடன்மாருதிகண்டானுலகுய்ய. (௨)

அதனீர்மையையறிவுற்றனனகலானவணமர்வா
ணிதனீர்படிகின்றார்புகுமிடமேசிவலோக
பதமாமிருணிரயப்புவிபாழ்பட்டனபவனன்
சுதனுலிஃதுண்டாகியபின்னென்பலசொலலில். (௩)

முன்னுனிதுபோலுந்தடமொழிதநதிலன்முனிவீர்
பின்னுனிதுங்கரும்புனல்பேசாதநுசாத
மின்னுவினையடுநற்றடமிதன்மேன்மையையெரிவெற்
பன்னுனறிவுறுவானஃதறியானெனலாவான். (௪)

வியமாருதிதடமாடினன்மன்னன்றருமசுக
னுயர்கேகயகுலமோங்கிடவொளிமைந்தனையுற்றான்
சயமாரவர்தொகைதானொருசதமென்றருள்சூதன்
புயமாணிறைசெயல்கேட்டிடுமுனிவோரொருபுகல்வான். (௫)

அணிகேகயமரபுள்ளவனரசன்றருமகன்
பணிமேனிலமுழுதும்பகைபடவென்றினிதாள்வான்
றணிவானிகலுயிர்மேலருடவருமொழியறமே
துணிவானவனிருதோள்புணர்தூயார்தொகைநூறுல். (௬)

தளர்நேரிடையவருத்தரதாராகணமனையார்
வளர்கேகயகுலமுய்ந்திடவடமென்றளிருந்திக்
களர்மாநிலமெனமன்னியகருவுற்றிலர்களிவண்
டுளர்தாரவனவர்பான்மகவுளதாநெறியுறுவான். (௭)

மாமேதமுன்மகமுள்ளனமருவுந்தலையாதி
யாமேவருகொடைதென்றிசையவர்பூசைகளலைசூழ்
பூமேவியசுரருண்டிகள்புதல்வற்பெறலுதவு
நாமேவியமனுவேபலநாளும்புரிகுற்றான். (௮)

முதிர்வெய்தினனதுபோழ்தினின்முதல்வன்றருமகன்
வெதிர்தோள்புரையரசன்மனைமின்னார்களின்முன்னாங்
கதிர்மாணிலவளின்றனள்காதனமகனும
மதிர்வார்கடலெழுமென்றுறமழவிர்சந்திரனறவீர். (௯)

நித்தன்சடைபுனைசந்திரனிகர்சந்திரனவனும்
வைத்துந்தியிலருடாயெனமனநண்பொடுமற்றைக்
கொத்தொன்றியகுழலன்னையர்குழுவுங்குயமுறுபா
லுய்த்தங்கெழில்பெறநல்கிடவொளியால்வளர்வுற்றான். (௧0)

தாய்மாரவர்தங்கட்கிருகடவாள்விழியானன்
பாய்மாவுடைமன்னற்குயர்பணைவன்புயமொத்தா
னுய்மாமதியேறுதியரவர்சூழ்துணையதுவாய்ச்
சேய்மாநகருள்ளார்பெறுசெல்வந்நகர்செல்வன். (௧௧)

வேறு.

பாலற்குரியசீராட்டுப்பண்ணியரசன்வளர்த்திடுநாட்
கோலத்தளிமந்தனிற்றுயிலுங்குலமாமதலைகொழுங்கமலக்
காலிற்றெறுக்கான்முள்ளூறுத்திக்கடுவுற்றிடலுங்கலங்கியெழுந்
தோலிட்டழல்கேட்டன்னையர்தாமுள்ளம்வெருவியுடனழுதார். (௧௨)

ஏங்கியழுதகுரலொலிகேட்டிறைவனமைச்சர்புரோகிதரோ
டாங்கணொருவனறிவானையனுப்பவவன்சென்றகன்கடையை
நீங்கலரியபண்டகனோர்நின்றுவினவவவனுரைத்தான்
றேங்குகுதலைமொழிமைந்தன்றேளால்வருந்தவழுதசெயல். (௧௩)

போனன்பறப்பன்முள்ளூறுத்திப்புதல்வன்பதைப்பப்பொருராகி
மானரழுததிறமனைத்தும்வந்துபுகன்றான்மன்னனுடன்
றூநான்மறையோருடன்றேர்ச்சித்துணைவர்தொடரத்துணைவோடு
தேனாரலங்கற்றருமகன்றிருமாளிகையுட்சென்றடைந்தான். (௧௪)

செறியும்பிடகரவர்தம்மாற்றேள்வெங்கடுத்தீர்மருந்துதவி
யறியுமகவைக்கொண்டாடியங்கையேந்தியணைத்தன்பா
னறியதுகிலும்பசும்பொன்னுநலங்கொண்முத்துநல்குரவு
மறியவழங்கிமருத்துவர்க்குமன்னன்மகிழ்கூர்ந்ததற்பின்னர். (௧௫)

ஏகிப்புறத்திலரியணைமேலிருந்தாரணரையெதிர்நாடி
பூசித்துரைப்பான்யார்க்குமகவொன்றுமிதனிலஃதின்றே
யாகிவிடுதனன்றுருமன்றேல்விளைக்குமருந்துயர
மாகமருங்குணூறறுவரைமணந்தேனொருவன்மரபதனால். (கசு)

ஆனேன்விருத்தனிங்கெனக்குமரிவைமார்க்குமொருமைந்தன்
றானேயுயிராமவனிறந்தாற்றரைவாழ்விழத்துமெல்லோமு
நானேரிடையார்நூற்றுவர்பானூறுமகவைப்பேறுகப்
பானேர்சுருதிநிலைதுணிந்துபகாவீர்விதிநூற்பரிசுணர்ந்தீர். (கஎ)

செப்புங்கருமம்பெரிதெனினுஞ்சிறிதேயெனினுஞ்செய்திடுகேன்
றப்பின்றுணைதருமமிசைத்தருகேன்மகவுசதமுண்டா
மப்பண்புடையபணியுண்டேலருள்வீரொன்றுனடல்வேந்த
னொப்புங்கருத்தாலவரெல்லாமுணர்ந்தாரரசறகுரைசெய்வார். (கஅ)

தேர்ந்தோமுரைத்துமன்னவகேள்சேதுவடிவாய்த்தென்கடற்பால்
வார்ந்தவருவிமருங்கொலிப்பவயங்குங்கநதமாதனநதான்
சூழ்ந்ததடமொனறதன்பாங்கர்க்குலவுமனுமகுண்டமெனு
நேர்ந்துமுனிவரமரர்பிறநெருங்கியதனைவணங்கிடுவார். (ககூ)

தரிசித்தாலுமத்தடத்திற்றெய்வப்பாணிபாணியினிற்
பரிசித்தாலும்பவநூராக்கும்படியினமிடியும்பழங்கணனுங்
கரிசிற்சிறநததீராகுங்களையுங்காட்டுங்கதிவேண்டில்
வரிசைக்குலநன்மடமாதர்மைந்தர்முதலாம்வரநல்கும். (உ0)

வாஞ்சையுதவுமதின்மூழ்கிமக்கட்காமமகம்புரிந்தாற்
றேஞ்சொன்மடவார்நூற்றுவர்க்குஞ்செம்மலுளவாமென்றிசைத்தார்
பூஞ்செங்கதிர்வேற்போர்வேந்தன்புரிவான்கிருதுபுகழ்மறையோர்
தாஞ்சென்றிகலும்படையமைச்சர்தம்மோடனுமான்றடம்புக்கான. (உக)

புகுந்துதனதுமனைமடவார்பொருநர்முதலோர்பலரோடுந்
தகுந்தண்புனிதத்தடமூழ்கித்தனயர்க்காமத்தழல்வேள்வி
யுகந்தபொருளோடுபகரணமொருங்குசேர்த்தொருதிங்கண்
மிகுந்தவிருப்பானவரோடும்வீற்றங்கிருந்தபின்வேந்தன். (உஉ)

மேடமாதந்தனிலிழைத்தான்விளம்பும்வேள்வியதன்கரைமேற்
றேடுஞ்சிறிதுமனுகாமற்சுருதிமுறையின்றுறைமுடிவு
கூடவமைத்தவாசிரியன்குவியாமகஞ்சேரவியுணவின்
சேடமதனைத்தேர்வேந்தன்றெரிவைமார்கடமக்களித்தான். (உங)

பின்னருரியமாதருடன்பிறைமயில்வேள்விமுடிவதனிற்
சொன்னமுறையினீராடித்துகடீர்குரவர்தமக்குதவிப்
பொன்னுமணியும்பூசுரர்க்குப்பூரிகொடுத்துப்புலம்பலவு
மன்னன்வழங்கியனைவோரும்வாழ்த்தவடைந்தான்வளநகரில். (உச)

வையம்புரந்தங்குறைநாளின்மருவுமாதமொருபஃதிற்
றையலார்களொருநூறுதனயர்ப்பயந்தாரவர்தமக்குச்
செய்யும்பிறவினைமுடித்துத்திலமும்பசுவுஞ்செழும்பொன்னும்
பொய்யில்புவியும்பூசுரர்க்குப்புகழ்க்கேகயர்கோன்புரிந்தளித்தான். (உரு)

மகவோரிரண்டாமுன்னவட்குமற்றையவர்கட்கோரொன்றுந்
தொகையாலொருநூற்றொருபுதல்வர்தோற்றம்பெருகவளர்ந்திளமைத்
தகையார்பருவமணைந்திடலுந்தரணியதனைத்தானென்று
மிகையார்நூறுகூறுக்கிவேந்தன்விருப்பாலவர்க்கீந்தான். (உ௬)

கோற்றேன்மொழியாருடனனுமகுண்டமணுகித்தவம்பண்ணு
ளாற்றுவரனருளிணைகருதியாவிதுறந்தான்றருமசகன்
வேற்றுமையருமுடன்விளிந்தார்மிக்கபுதல்வன்சந்திரன்று
னீற்றுர்தினந்தொட்டவர்க்குரிமையிழைத்தான்சிராத்தமீறைவையும். (உ௭)

வேறு.

எழில்வைகுண்டமடைந்தனன்மாதரோடிறையதன்பினர்சந்திரனாதியோர்
பழுதின்மொய்ம்பொடுமுன்பகிர்பாரொலாம்பகையொழிந்துபுரந்தனர்நாளுமே
யழிவறும்புகழ்மன்செயலோடுநீடனுமகுண்டமதனறகைகூறினோ
முழுகுமின்கணலம்பெறநாடுவார்மொழிதருங்கதையும்பரில்வாழ்வரே. (உ௮)

அனுமகுண்டச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் கoஉ௩.

# அகத்தியதீர்த்தச்சருக்கம்.

நிதியமலைமிசைத்தவளநெட்டெயிறென்றினைமுறித்துநிருத்தன்பங்கில்
வதியமலைமகனெழுதப்பாரதநூல்வகுத்தவன்றாள்வணங்கிப்பின்னுந்
துதியமலைப்புலன்முனிந்தருதமுனிமுனிவராக்குச்சொல்வான்றென்னூற்
பொதியமலைமுனிதீர்த்தம்புகுவர்முதலனுமகுண்டம்போற்றுயேலோர். (க)

பைந்தமிழ்மாதவனமைத்தபட்டமிதுமேருவுடன்பண்டைநாளில்
விந்தகிரிமிகவிகலிவிண்ணொடுமண்புதைப்பவிடம்விடுமூச்சின்றி
யந்தவுயிர்களுக்குறலுமறிந்தமரர்கயிலைமலையணுகியண்ணற்
கிந்தவகைமுழுதுமடைவினிலியம்பியிருகழற்காலிறைஞ்சிநின்றார். (உ)

மஞ்சுமலிவரையணங்கைமணம்புணர்வான்விருப்பினொடும்வசிட்டனாதித்
தஞ்சமறைமுனிவரரைத்தடஞ்சிலம்பன்பால்விடுத்துத்தரும்பின்சேயை
நஞ்சுபொதிகளன்விளித்துநீயணுகிவிந்தகிரிநளிநீக்கென்றான்
செஞ்சொலருந்தமிழ்முனிவன்சிவபெருமான்கழல்வணங்கிச்செப்புகின்றான். (௩)

குருகுபுனைகரத்துமையைவேட்டருணின்மணவாளக்கோலங்காணு
தொருதமியேன்புரிந்தகொடுந்தீங்கெவனோவெனவெருக்கொண்டுளைப்பவீசன்
வருதியெனமருங்கழைத்துமனநடுங்கேல்வண்ணமிதுமற்றைக்காடேனும்
பொருவினகர்தனிலுனக்குக்காட்டுதும்யாமுண்மையிதுபோதியென்றான். (௪)

விடைகொண்டுவிடையவன்பால் விரைந்துசென்றுதென்றிசைப்பால்விண்ணுமண்ணும், புடைகொண்டுவளர்விந்தப்பொருப்பதன்மேற்றிருப்பதமென்போதுசூட்டிக்,கிடைகொண்டநிலத்தளவுங்கீழ்ப்படுத்தியிடம்பலவுங்கெழுமியெல்லைத், தடைகொண்டுவளர்கந்தமாதனத்தின்றலையணைந்தான்றமிழ்நர்கோமான். (௫)

பிறங்கலதன்பெருமையுணர்ந்தாயிடைத்தன்பெயராதனாற்பெருந்தண்வாவி
யறங்குலவவருள்புரிந்தான்றானுமவண்வீற்றிருக்குமந்நீர்ப்பட்டந்
திறங்கெழுமுக்காலத்துஞ்சிறப்புடையதிவ்வுலகிற்செல்வங்கல்வி
நிறங்கலவாவீடுதருமற்றுநினைந்தனவுதவுநிகர்வேறின்றால். (௬)

சுனையதனிற்றீர்க்கதமன்றருபுதல்வன்கக்கீவான்றொல்லைநாளி
னனைதருநல்வினைப்பயனாற்சுவநயனுமன்னனருணாறுமென்கூந்தற்
புனையிழையைமணம்புணர்ந்தானவன்சரிதந்தருந்தருமம்புகரின்றச்சு
மனையகதைவிரித்துரைவன்மனநிறுவியறிந்திடுமினறத்தின்மிக்கீர். (௭)

ஏர்க்குமருந்தவமுயலுமியல்புடையானந்தணரிலேற்றமிக்கான்
றீர்க்கதமனவன்குமரன்கக்கீவானுபநயனச்செய்கைமுற்றிப
பார்க்கணுயர்புகழ்ப்பிரமசரியநிலைவழுவாதபண்பினீடிக்
கூர்க்குமதிமறைதெரிவானுதங்கனெனுங்குரவனிடங்குறுகினானால். (௮)

குறுகிமறையநனங்கமிருமூன்றுசாத்திரங்கள்குலவுந்தொன்மை
யுறுகதைகளிதிகாசமுபநிடதமவைபிறவுமொழிபினோடு
மறுபஃறாண்டாசிரியன்மனநிலையிற்பகுத்துணர்விலுய்ந்துபின்னர் [வான். (௯)
மறுவில்பொருள்வளநகர்ப்போய்க்கொணர்ந்தாசான்றிருமுன்னர்வைத்துச்சொல்

ஒண்மறைமுதலனைத்துமுதங்கவுனதருளாதனாலுணர்ந்தேனில்லிற்
போதல்புரிகின்றனனம்விடைதருதல்வேண்டுமெனப்பொருவிலாசான்
காதலனன்றேதுநின்கடிகொளமணமுடிவதற்கோர்கருமஞ்சொலவேவஞ்
சேதுவின்கணுயர்கந்தமாதனத்தின்மலயமுனிதீர்த்தமுண்டால். (௧௦)

வீடுதிருமுதலுதவும்வினைகளையுமக்கடத்தில்விதியினாலே
யாடுதிநீமுப்பொழுதுமாண்டொருமூன்றதன்காறுமப்பாலாண்டிற்
கோடொருநான்குளதாகிச்சரற்காலமுகிறநலம்போற்கொழுங்கால்வெள்ளைப்
பீடுடையமேருவெனவிறைகயிலைநடைபயின்றபெற்றிற்றென்ன. (௧௧)

அடியிதிப்பினுகிர்நுதியாற்றுவக்குண்டுபாதலஞ்சேரவநாத
னெடுநிகளச்சங்கிலிபோலீர்ப்புண்டுடைந்தலையநீண்டவாலைப்
படிமிசையுமுகிலுறங்கும்பாற்கடலிற்றோய்த்துநிமிறபாக்கவீசிப்
பொடிவிழுநீள்பரணடப்பித்திகையைத்தனதபரப்புறத்திற்றேய்த்து. (௧௨)

புழைக்கரத்தால்விண்முகடுபொள்ளல்படவுரிஞ்சியண்டப்பொருள்களெல்லாந்
தழைக்குநிலத்திடையுகுத்துத்தடமருப்பாற்படியுழுதுதானநீராற்
குழைத்தளறுபடநெடியதிசைக்கரிகளவைமுழுதுங்குலவுமுண்டிக்
கழைச்சுவைகடருங்கருத்தாலுயிர்கவராதருள்புரிந்துகடைக்கட்டியில். (௧௩)

வீழ்ந்தபொறிவடவையெனவிரிகடலிற்கிடந்தெரியவிலங்கலெல்லாந்
தாழ்ந்தசெவிப்பெருங்காற்றில்வேர்பறிந்துகிடுகிடெனத்தளரத்தேவர்
சூழ்ந்திறைஞ்சுமகபதியூர்மதக்களிறுசேண்வழுவித்துயின்மயக்கா
லாழ்ந்தபுனற்கயமதனேர்விழுந்தமிழ்ந்திமீளவெழுமதனையேய்ப்ப. (௧௪)

கந்தமதக்கார்மழையிற்சுரும்புகருங்கனோபலத்திற்கஞலக்கூமர்
தந்தியொன்றுதமிழிருடிதட்டத்திலெழுமதன்பிடரிற்றயங்கிரண்டா
மிந்திரன்போலினிதேறிச்சுவநயனுமன்னவனூரிடத்திலேகு
வந்தரசன்கண்டுவினைமகிழ்ந்திடுந்தன்மகவுயூரமாதிற்றென்றே. (௧௫)

முற்பகலக்குரிசின்மகனாற்கோட்டுவெள்ளிபத்தின்முதுகிலேறிப்
பொற்பினொடும்புகுதுமவன்றிருக்களத்திலலங்கல்போடேனென்னக்
கற்பனைகொண்டனளதனைமண்புரக்குமரசிருடீர்கருத்தினாடி
வற்புறுநெஞ்சகங்கவன்றானாரதனப்பொழுதவன்பால்வந்தான்மாதோ. (கசு)

நாரதனைமுறைவழுத்திநரபதிதன்மகளுளத்தினாட்டமுற்ற
நீரதனைவிண்ணப்பஞ்செய்துவெள்ளைநெடுங்களிறுநிலவுதேவ
னூரதனிலுளதாகுமிவள்விரதமென்மனத்தையுலைக்குமந்தோ
வேரதனிலுயர்மடவார்வாழ்க்கையுறாதீன்றவரிலிருத்தறுன்பம். (கஎ)

என்னையிதற்குபாயமெனநாரதன்வேந்தனைநோக்கியெய்துமாற்றா
லுன்னையுளாத்தினிதகன்றானதுவரவினைநாடியுற்றான்மன்னன்
பின்னையெனாதிக்கணமேபிள்ளாயக்குறுமுனிவன்பெருநீர்வாவி
தன்னையடைந்தாடுகெனக்கக்கீவானமலயமுனிதடத்தைச்சார்ந்தான். (கஅ)

தூவருடந்திடமுநங்கன்சொற்படியைம்புலனடக்கித்தூநீராடி
மேவருடங்குயர்நகரபட்டினியும்பாரணமும்விதியினாற்றி
மாவருடமலயமுனிதடமுறைவானவிழிதுயின்றான்வாவிப்பாங்கர்
மூவருடமுடிவுறுநாண்மாலைவினைக்கடன்முடித்துமுந்நூன்மார்பன். (க௯)

கடையாமத்திறுதியெழுகடலொலிபோலெழுமொலியாற்கக்கீவான்கண்
படையொருவியெழுந்திருந்தான்பதமதனின்மதின்மதுரைப்பதிக்குமன்னுந்
தொடைமருவுபுயசயிலச்சுவநயன்றான்மாவேட்டைத்தொழின்மேற்கொண்டு
மிடையுமிருந்தானையுடன்வியனகந்தமாதனமாம்வெற்பையுற்றான். (உ0)

வேட்டைவினைவிளையாட்டின்மேனியிளைத்தகத்தியன்பேர்விமலவாவிக்
கோட்டையடைந்தனனிறைவனதுகாலைத்தீர்க்கதமன்குமாரனீரும்
பூட்டையுநேர்பவமகற்றும்புகழ்நியமத்துறைமுடிபுபோற்றியுற்றா
னாட்டயங்குமொருபுழைக்கைச்சயிலமெனநான்கெயிற்றுத்தவளவேழம். (உக)

கும்பமுனிதடத்தெழுந்துமருங்குறலுமதுகண்டுகுரவன்சொன்ன
கம்பமதகரியிதுவென்றெழுந்துபுனல்படிந்தேத்திக்களிற்றைமேற்கொண்
டம்புவியாள்சுவநயனாரடையநினைந்திடும்பொழுதிலந்தவேந்த
னும்பன்மிசைக்கக்கீவானுழையணைந்தான்விருப்பினொடுமுரைக்கலுற்றான். (உஉ)

இருபிறப்போய்வருதியுனக்கேதுபெயர்யார்குமரனிபத்திலேறி
யொருதனிநீபோவதெவணுரையெனலுந்தன்பிறப்புமுதங்கனென்னுங்
குருமுதல்வன்பணித்தனவுமணவினைமேற்செல்வதுவுங்குறைபடாம
னிருபனுணர்வுறமொழிந்தானவனதுகேட்டுவப்புதநிகிலையின்றாகி. (உங)

எந்தவிறைமகடனைநீமணக்கநினைத்தனையவளையீன்றளித்த
வந்தவிறையவன்யானேயந்தணநீயணைந்ததுநன்றாயிற்றையா
முந்துமுயறரும்பிரமசரியநிலைவிடுத்தினிநீமுகிழக்கொங்கை
நந்தமகடனைவேட்டுநல்லறமாமில்லறத்தைநடாத்துகென்றான். (உச)

அறைவதுகேட்டந்தணன்சேயழகியதேயரசவெனையளித்தமேலோன்
மறைவனத்திற்கடவுளடிவணங்கியருந்தவம்புரிவன்மற்றவன்பா
னிறைபெருகுவிப்பிரனைநீவிடுத்தியெனவுகந்துநிருபர்கோமான்
பொறைமருவுபுரோகிதனாஞ்சுதரிசனன்றனைச்சிறப்பிற்போக்கினானால். (உரு)

சுதரிசனன்றனையொடுஞ்சுருதிவனத்துடசிலைதன்னின்மன்னும்
பதரிலரும்பொருடெரிந்ததீர்க்கதமன்பதமலர்கள்பணிந்துபோற்றி
யெதிரிலருந்தவந்தருமமூறின்றியினிதுநடந்தனவோவிவடப
புதரினுயர்புலமறைவோயெனவினவத்தீர்க்கதமன்புகலுகின்றான். (௨௬)

எழுதரியமொழிமுளரியிறையருளாற்குறைவெமக்கிங்கில்லையென்னும்
விழுமிதினீயிருந்தனையோசுவநயன்றன்புரோகிதநீவேந்தைநீங்கி
யொழிவதிலையணைந்தபணியுளாயென்னச்சுதரிசனனுனதுநண்பா
விழிபிலைநன்றிருந்தனனாற்சுவநயனின்பால்விடுத்தானியம்பக்கேண்மோ. (௨௭)

மகத்திலுயர்நின்மகனுங்கக்கிவானவன்கந்தமாதனத்தி
லகத்தியன்பேர்ப்புனற்றடத்தானவன்குணமுமழகுமொழுங்கறிவுமன்பு
மிகத்தெரிந்துதன்மகளையவற்களிப்பான்விருப்புற்றுவேட்டைபோங்காற்
சகத்திலுயருனதுகுலத்தனயனைக்கண்டிப்பணிதான்சாற்றினனால். (௨௮)

ஐயனுமதிவேண்டுமென்றனன்மற்றுனைகயினுலரசன்பெற்ற
மையுறுகண்மடக்கொடியைநின்குமரன்மணப்பவருள புரிகவெனுஞ்
செய்யுமிதுபொருட்டாகவெனைவிடுத்தானினையபெருஞ்சேனையோடும்
வெய்யவினைப்பவந்தீர்க்குந்தீர்க்கதமமுனிவவெனவிளம்பிப்பாற்றி. (௨௯)

யானடைந்தபணிக்குடம்பாடருளுகென்றான்சுதரிசனனிலங்குவேதக்
கானடைந்ததீர்க்கதமன்களிசிறந்துநமக்குமிதுகருத்தேயாமும்
வானடைந்தநெடுங்கந்தமாதனத்துவருதுமெனமறைக்காட்டண்ண
றேனடைந்தபதம்போற்றிப்புரோகிதனேடவண்சென்றான்றினமோராறில். (௩0)

மலையமுனிதடத்துறையுமகற்கண்டானவனுமிகமனமகிழ்ந்து
தலையளிகூர்தாதைபதந்தொழவெடுத்துப்புல்லிமடிதனிலிருத்திக்
கலைமறையும்பிறநூலும்பயின்றனையோவெனப்புகன்றுகாறவனை
நிலைபெருகுமணவினைமேற்கொண்டநெறியீன்றவற்குநிகழ்த்துகின்றான். (௩௧)

குருவுதங்கண்மணமுடியுங்கொள்கைநவின்றருநதமிழின்குரவன்வாவி
மருவுகெனவொருமூன்றுவருடமதிற்படிந்துறறேன்வந்ததந்நப்
பருவமதிலருள்புரிந்தபடிதனதுவயத்திலிவண்படர்ந்துமாதை
திருபனுந்தந்திடநேர்ந்துனையழைத்தானெனப்புகன்றுநின்றான்மைந்தன். (௩௨)

தந்தையெனுந்தீர்க்கதமன்றனயனெனுங்கக்கீவான்றன்னைச்சார
வந்தசெயல்சுதரிசனன்வாய்க்கேட்டுச்சுவநயனுமடியில்விட்டுக்
கந்தமலர்ப்பங்கயனைக்கவுசிகன்சென்றடிவணங்குங்காட்சிபோலச்
சிந்துமுனிதடத்தனுகித்தீர்க்கதமன்சேவடிகள்சிரத்திற்றாழ்ந்தான். (௩௩)

ஏரிலக்கில்படைவேந்தையெழுதியெனவாசிபலவியம்பியன்பாற்
றேரிலக்கின்மறையுணர்ந்ததீர்க்கதமன்குமாரனுடன்நிகழும்போதி
னேரிலக்கில்சே[illegible]டைநிலவுதனுக்கோடியெனுநீரிற்றோய்வா
ஞேரிலக்கமுனிவ[illegible]மாணவகர்குழாஞ்சுற்றவுதங்கனுற்றான். (௩௪)

உதங்கனிருசரண்டொழுதான்கக்கீவானவனாசியுரைத்தான்பின்னர்ப்
பதங்கனிகர்தீர்க்கதமனுதங்கனெனுந்தவத்திலுயர்படிவர்தம்மி
லிதங்கழறிப்பழமைபலவியம்பினர்களிறைவனும்வந்திறைஞ்சிநின்று
கதங்கடியுமுதங்கனடியிருடியுமன்னவற்குநலங்கரைந்தானன்பால். (௩௫)

ஆயிடையிம்மணவினையைமுடித்திடுனத்தீர்க்கதமற்கறைந்தானண்ண
றூயதவன்மன்னவகேளைன்றுளுநாளையின்றேறதொடங்கல்வேண்டுரு
சாய்வில்கந்தமாதனமேகடிமறைநூற்சடங்குதருதானமின்னே
சேயிழையைத்தருதியென்னப்புட்டகமண்டபத்திறைவன்சென்றுனெல்லே. (௧௬)

கடைபுரக்குமொருநூறுதொகைவிருத்தசண்டர்தமைக்கடிதினேவிப்
படைபுரக்குமதாவிழியைத்தருதிடுனக்கடும்பரிமேற்படர்நதுவல்லே
மடைபுரக்கும்புனன்மதுரைவாநுமணம்புகன்றிறைவன்மனையாரோடு
மிடைபுரக்குமருள்படையாவிளமுழையைக்கொண்டணைந்தாரிறைவன்பாங்கர். ௧௭

மாதானநெடுங்கந்தமாதனத்திற்றீர்க்கதமன்மற்றைவைகற்
கோதானமுதறசடங்குமுடித்ததன்பின்கக்கீவான்குலவிலங்கள்
மீதானவெணகளிற்றின்பிடரேறியிருகுரவர்வியப்பவங்கி
யாதானம்பயின்மறையோர்வாழ்த்தெடுப்பவிண்ணிழிந்தவமரர்கோன்போல் (௧௮)

காரணங்குதுமலரசன்கன்னிமனைக்கற்பனையின்கடைகாண்கிற்பான்
றோரணமகனெருங்குபெருங்காழகமாளிகைபுகுவான்றெக்கபோது
லாரணங்குமெண்ணமிளிமுற்றியதென்றகமகிழ்ந்தாளதன்முன்வாயிற்
போரணங்குபுயதிருபனைதிரேற்பக்குரவரொடும்புகுந்தான்மைந்தன். (௧௯)

மருக்கமழுமலர்க்கூந்தல்வனிதையெழிற்சிலதியர்கண்மணிப்பொற்றட்டைத்
தருக்கிடுளுங்கரத்தேந்திமணமகனுங்கக்கீவான்றன்னைச்சூழ்ந்தா
ரிருக்குநெறிமுனிவருடன்றுகின்மனையுட்கொடுபோகியிறைவன்றூறு
மருக்கியமேமுதலியநல்லுபசாரமவர்விரும்புமடைவிற்செய்தான். (௨௦)

சடைமவுலித்தீர்க்கதமனுதங்கனிவர்குமரனெடுந்தவத்தின்மேலோர்
மிடையவெழிற்சுதன்மையெனவிளங்குமணப்பந்தரின்கண்வீற்றிருந்தா
ரடையுமதுபொழுதின்கட்புரோகிதனுடைவனிதலமடங்கத்தன்னோர்
குடைநிழலிற்புரநதருளுஞ்சுவநயன்றன்கொடிவந்துகுமரிதன்னை. (௨௧)

சதவிதழிறபொறியிருவர்சசியொருத்தியல்லளெனத்தயங்குவாளை
வதனமுதியாவுலகம்வயங்கவளர்சுருட்கங்குல்வனப்பினாளைப்
பதமலர்மென்சிறுநடையாறபடிமடந்தைதவமுடிக்கும்பண்பினாளைப்
புதுமணத்தண்காவணத்துட்புங்கவர்முன்சுடர்விளக்கிற்பொலியவைத்தான். ௨௨

வைச்சதன்பின்மணவணிசால்வல்லியவடீர்க்கதமன்மகன்கழுத்திற்
செச்சைமலர்மாலையுறழ்திருக்கரத்தாற்செண்பகப்பூந்தேமென்மாலை
யச்சவையினவருவப்பவணிந்திட்டாளுதங்கனவணங்கியோம்பி
யெச்சநடங்கிடையவள்கைபிடிப்பித்தான்கக்கீவானெழிற்கரத்தால். (௨௩)

பின்னவளைவாழ்த்திவினைமுற்றியபின்றீர்க்கதமன்பிறங்குதங்கன்
பொன்னுரைநேர்திதலைமுலைமகள்கேள்வன்மருங்கில்வரும்பூமித்தேவர்
முன்னருடன்மன்னவன்றன்மறையவர்தொக்காயிரத்தான்மு[illegible]தாறு
நன்னருணரந்தணருக்குணவளித்தானமுதளித்தநாரணன்போல். (௨௪)

அளித்ததன்பினுசிரியனுதங்கனுந்தனுசிரமத்தடைந்தான்மற்றைத்
தெளித்தமறைமுனிவர்களுந்தங்கடங்கடேயமதிற்சென்றாரங்கட்
களித்தறுகண்வெள்ளியமுங்கடமுனிவன்றடங்குளித்துக்கரந்ததங்கண்
விளித்திறையைத்தீர்க்கதமன்வேதவணமகன்றுடன்போம்விருப்புறைத்தான். (௨௫)

அரசனுந்தன்மகள்பொருட்டச்சந்தனநூறாயிரம்பொன்னேந்துநூறூர்
புனைமிறுக்கிலோரயுதம்பூட்டிபெட்டியொருநூறுபொருவில்சேதா
நிரையணங்கிலிணங்கியர்கணிலவுமிழுமணித்தாளநீடலங்கல்
வரைசெய்வகைமேயாரொன்றிலாயிரமீந்தனன்முனியுமகிழ்ந்துவாங்கி. (௪௬)

வாரியுண்டோன்றடம்படிந்துமனைவியொடுமகனொடுராமறைக்காட்டெய்திக்
காரியல்கந்தரம்போற்றிவீறிருந்தான்றீக்கரமன்கணிப்பில்கால
மாரிபனுங்கக்கீலாவிறைமகடோள்புணர்ந்தவபுற்றமர்ந்தான்பன்னூட்
பாரியதோட்சுவந்பனுந்தமிழ்முனிநீபடிந்தவன்றன்பதியிற்போனான். (௪௭)

வேறு.

ஒருதமிழ்முனிநடமிக்காலேயுவமனிமணமதாகக்கோன
புரிகதைமறைபகர்பொறபாலேபுகழ்திரமுடைய நூறப்பாகே
தருவதற்குருவொங்மெய்ப்பேறேதவறறமுனிவிர்பாடியபிரா
மாபிவில்வினையதீர்ந்தறநீரோமருவுவரிசைசெயழநரூனே. (௪௮)

அகத்தியதீர்த்தசருக்கமுற்றிற்று.

ஆ-திருவிருத்தம் ௨௦௭௧.

---

# இராமதீர்த்தச்சருக்கம்.

---

வாதராயணன்மாணவகன்பினும்
வேதபாரகர்கேட்கவிளம்புவான்
சீதைகோன்றடஞ்சென்றுநுளிப்பரான
மூதுணர்ந்தறியனப்புனன்மூழ்கினோர். (௧)

மறையுமோதிமந்திரபேதமுங்
குறையுடைப்பொருள்கொணர்ந்செயவேள்வியு
நிறைபலந்தருநீங்கிந்நீங்கெலா
மிறைமிராமன்றடத்தினிடைத்தவோ. (௨)

மட்டுவாரிசத்தோடிவாயவண்டுபோற்
புட்டில்சேர்கைப்புயலனையான்றடந்
திட்டதேதுமிலக்கின்றியோங்குமான்
முட்டிமாத்திரமேனுமுனிவிர்காள். (௩)

தனிமைசான்றசவுனகனோதியீ
ரினிதுகேண்மினிராகவன்குண்டமா
னனிபெருந்தடநாடிநடந்தோர்
புனிதமாக்கதையுண்டுபுகலுகேன். (௪)

வோதியமாதவன்பொன்னடிச்சென்னியான்
றுதியினீடுசுதீக்கினனுயிடை
விதியின்மேயவியன்றவமாற்றுவான்
பதியிராமன்பதந்தொழும்பண்பினான். (௫)

ஈறில்காட்சியிராமனெழுத்தெனு
மாறுசேர்மறையைந்தெனுமாயிர
மூறுகாதலினுடொறுமோதுவான்
கூறுமன்னவன்குண்டத்தின்மூழ்கியே. (௬)

பலியுணாவிற்பசித்தழலாற்றுவான்
வலியவைம்புலவஞ்சனையஞ்சிடா
னெலிகொணீதியொழுங்குபிழைத்திடான்
கலிகொளெண்ணிரிகாலமிருந்தனன். (௭)

பொழுதுபற்பலபோனபின்பொன்னெடுங்
கழலிராகவன்காருறழ்மேனியைச்
செழுமலர்த்திருச்சீதையைநீங்கிடா
தெழுதிநெஞ்சினிலேத்தனுடங்கினான். (௮)

வனிதைகோசலைமாணெடுமைந்தனே
சனகனீன்றசரிவளைகாந்தனே
யனுமனன்பவமரர்கொண்டாடநீ
டனுமுறித்ததடம்புயவெற்பினாய். (௯)

தாடகைக்குச்சமன்பதியீந்திடாக்
காடகைக்குங்கவுசிகன்வேள்விமேற்
கோடகைக்கொடுகாத்தருள்கோசல
நாடகைத்தகரனுயிர்நஞ்சமே. (௧௦)

கவந்தவேங்கையுங்கள்ளமாரீசனு
நிவந்தவேணமுநீடுயிர்நீங்கவே
சிவந்தகண்ணசிலைமகளாகவன்
றுவந்தசேவடியொண்டனிவீரனே. (௧௧)

மழுவிராமன்வலங்கவர்மைந்தனு
யெழுவிரிச்சிகன்கான்முளைக்கீசனே
தழுவுசீர்த்தித்தசரதன்செல்வமே
குழுவுருவலிவாலிவெங்கூற்றமே. (௧௨)

தம்பிபாடுந்தொடைப்பரதன்றனை
யெம்பிவாவென்றிலக்குமன்போலரு
ணம்பிகுழுநரலையிலங்கைமன்
றம்பியச்சந்தவிர்த்ததலைவனே. (௧௩)

மோதுவாரிமுரணுடைத்தாயிடைச்
சேதுவாற்றிச்சிரமொருபத்தனைக்
காதியாருயிர்கைக்கொளுங்கைத்தலப்
போதின்மேயபொருவிற்குரவனே. (௧௪)

பல்லுயிர்க்கும்பழவினைவாழ்க்கையி
னல்லறீர்க்குமருளின்சலதியே
யெல்லவர்க்குமிரவியினேர்வரு
மல்லலங்கணவென்றுவழுத்தியே. (௧௫)

ஆளுவாயுன்னடியவன்யானென
நாளுநாளுநலங்கொளிராகவன்
றுளிலன்புதழைப்பச்சுதீக்கினன்
வேளைவென்றவியன்றவநாற்றினன். (கசு)

ஆமனங்கொள்சுதீக்கணமாதவற்
காமநாளிலயோத்தியர்காவலன்
றேமலர்க்கட்டிருவருட்பார்வையா
லோமுதற்பிரமத்துணர்வுற்றதால். (கஎ)

பண்டைவேதம்படியாதுணர்ந்தனன்
கொண்டஞானகுரவனையின்றியே
யெண்டருங்கலையாவையுமாய்ந்தனன்
விண்டிடாதுடல்விண்செலக்கறறனன். (கஅ)

வீற்றுடற்புக்குமீள்வதுமேவினு
னேற்றதேவர்க்கெதிர்மொழிபேசிடு
மூற்றமுற்றுறவிமுன்னுமுயிர்க்
கூற்றுளங்கொளுங்கொள்கைபடைத்தனன். (கக)

[illegible]தொழிற்புரிமூவரிருப்புட
னெத்திறப்புவனத்தினுமேகிடுஞ்
சித்திபெற்றனன்வாயிலிற்றேர்கொணு
வித்தகப்பொருட்காட்சியுமேவினன். (உ0)

தாமவார்குழற்சானகிநாயக
னாமவாவியின்மூழ்கியநன்மையாற்
ேறமவாவில்சுதீக்கணனெய்தினன்
சேமவாழ்வெனும்யோகர்திருவெலாம். (உக)

இத்தகைப்புகழ்மேன்மையிசைந்ததாய
மைத்தபாவமும்வஞ்சமரணமு
முய்த்திடாததருமத்துயர்ந்ததாய்க்
கைத்தகிழ்நிலங்காட்டாக்கவினதாய். (உஉ)

வீடுமாக்கமும்வெஃகியசித்தியும்
பீடுநல்கும்பெருமைபடைத்ததாய்க்
கோடுவார்சிலைக்கொண்டலன்னுன்கழ
லூடுகாதறருந்திருவுள்ளதாய். (உ௩)

ஞாலமேத்துநறுந்தடமற்றதன்
கூலமேல்வளர்கோசலர்கோமக
னீலகந்தரநித்தனருட்குறி
மூலலிங்கநிறுத்திமுறைமையால். (உச)

ஆசரங்கடனிர்ப்பத்தனன்பினுற்
புராரிபொற்பதம்பூசனைசெய்தன
னிராமநாதனையேத்துவரொய்துவார்
பராபரந்திருமேவப்படாததோ. (உ௫)

கண்ணன்காகுத்தன்காதலினர்ச்சனை
பண்ணும்பார்ப்பதிபங்கன்பதமலர்
நண்ணிமுன்னநவிற்றியபொய்ப்பவம்
புண்ணியநதருபுத்திரன்போக்கினான். (௨௬)

அன்னவாசகங்கேட்டருள்சூதனை
முன்னிருநதமுனிவர்வினவுவா
ருன்னும்வாய்மையுதிட்டிரன்பொய்மொழி
யென்னகாரணத்தாலன்றியம்பினான். (௨௭)

அடலிராமதடத்தினிலாடியே
சடிலசேகரன்றன்னருட்கண்ணினாற்
படிறுசொல்பவம்பாற்றியபண்பெலா
மடமறப்புகலென்றுவழுத்தினா. (௨௮)

வலத்திருக்கைமழுப்படைவள்ளலார்
நலத்தசேவடிநண்ணியுதிட்டிரன
சலத்தினோதுசடப்பவநீர்ந்தமை
சொலத்தொடங்கினன்சூதனவர்க்கரோ. (௨௯)

பண்டுபாண்டவரைவரும்பார்த்திபங்
கண்டெரிந்திடான்கானமுனையோகரு
மெண்டகும்பெருவாழ்வின்பொருட்டுநல்
கொண்டிடன்றுகுருவிலமேயினார். (௩௦)

ஆங்கணையிருநாளமராற்றியே
காங்கெயன்மெய்கலங்கிவிழுந்தபி
னாங்குசான்றவிரத்தனுணர்ச்சியான
ருங்குவில்லன்றனுமறைத்தேசிகன். (௩௧)

வட்டமூரகவில்வாங்கியொரைந்துநாட்
டிட்டத்தாயமனையேற்றுச்செழுஞ்சர
மட்டிலாதவழங்கினன்மாரிபோற
பட்டொழிந்தனபாண்டவர்தானைகள். (௩௨)

பாண்டவப்படைசாய்தலும்பாஞ்சால
ராண்டகைத்திறல்வீரனடர்ந்துபோர
மூண்டுவாளிமுடுக்கிமுடங்குவின
மாண்டதேசன்பதாதியைவாட்டினன. (௩௩)

மீட்டுவிற்குருவேதியன்றன்படை
வாட்டுதிட்டத்துய்மன்மிசைவார்சிலைப
பூட்டுமேப்புலபோக்கினன்போக்கலுங்
கூட்டுபாண்டவர்வானிகுலைந்தவே. (௩௪)

அனிகமோடலுமங்கணருச்சுனன்
குணிசிலைக்குருமேற்சிலைகோட்டினா
னணிகொள்போரிதுகாணுநசையினா
லினிதுவானவர்வானில்வந்தீண்டினார். (௩௫)

பொருவுபோரிவைபோற்பிறவின்மையா
லிருவர்போர்க்குமிதரவிதரமே
மருவுநேருவமானமிவருக்கிடப்
பெருகுகாதல்பெறிறகவிவாணரே. (௮௬)

பல்லமாரிபரிதிமறைத்திட
மல்லலாடமர்மற்றிவர்செய்வழிச்
செல்வினூர்தியன்சேய்சிலைபாண்மையை
வில்லிறுதன்வியந்துபழிச்சினான். (௮௭)

வைக்குமன்புடைமாணவகன்றனை
யக்கணத்தினகன்றமராற்றினான்
பக்கமேவியபாஞ்சாலநாயகனை
கைக்கணைற்றிரிங்கார்முகபோதகன். (௮௮)

வருந்தவுண்டையின்மாண்டனுத்தேசிகன்
மிருத்தநூற்றின்மிசையிருபானொருந்
சகத்திரங்கழன்மன்னவுநந்கன்போ
ருகத்துராந்தவருளுயிர்நீக்கினான். (௮௯)

செவ்வியன்னதிற்றிட்டத்துய்மன்னனை
கவ்வுநெஞ்சினன்கார்முகத்தேசனேமற்
பவ்வமுண்டபடர்முகிறாறைபோல
வெவ்விறற்கணைபற்பலவீசினான். (௯0)

பூபதிக்குலமிறறவபபோரசிர
தீபமனனதொரட்டத்துய்மனமிசை,
கோபமுண்டெதிர்க்கடிபபுடைத்தனன
சாபநாதன்றனதுகைவாளினால். (௯௧)

கட்சம்வீசிக்கடிதினைறநாசியின்
வட்கலின்றெதிர்பாஞ்சாலமன்னவ
னுட்கவாளியுலப்பிலதூவினான்
கொட்கநெஞ்சங்குலைந்தவன்மாழ்கினான். (௯௨)

வாயுமைந்தன்மருவுபாஞ்சாலர்கோ
னுய்யுமாறுகண்டோடினனெல்லைதன்
சேயதேரினிலேற்றினன்சேனமுமுன
னூயகாட்சித்துரோணனைச்சொல்லுவான். (௯௩)

அரியநான்மறையந்தணர்தங்களிற்
பெரியராவர்பிறர்க்கிடொண்ணிலார்
தரியலார்தமரொன்றிருசார்பினுக்
குரியரோபொருளுண்மையுணர்ந்துளோர். (௯௪)

மெய்த்திருத்தவம்வீரம்படைக்கினு
மெத்திறத்திடரெய்தியதாயினு
முத்தமக்குலமேன்மையொழுக்கமார்
தத்தநீதிபிழைப்பர்கொல்சால்புளோர். (௯௫)

சாதிவாய்மைதவறித்தருக்கினாற்
நீதுசேரினுஞ்செய்யார்கொலைத்தொழி
லாதலன்றியவனியரசனை
வாதைசெய்வர்கொன்மாமறைவாணர்தாம். (சசு)

கொன்றிடாமைகுலமறையோர்செயல்
வென்றியென்றுவிதிப்பழுதாறறியே
புன்றலைக்குடிவேடர்புரப்பரா
னன்றுநன்றுசுருதிநடக்கையே. (சஎ)

கேணிகழ்த்துவன்கேடறுசாயகத்
தூணிவெந்நுறத்தூக்கித்துரோணநீ
மாணிலத்துயிர்காக்குமனுமுறைக்
காணிவேந்தரைக்கொல்லக்கருதினாய். (சஅ)

வெட்டும்வாட்கைத்துரோணவெனமேலது
புட்டின்மேவுபொருகணைத்தூணியோ
மட்டுறுதமறைப்பொருட்புத்தகங்
கட்டியார்த்தகவளிகையேகொலோ. (சகூ)

பைத்தகொம்பர்ப்பலாசநற்றண்டமோ
கைத்தலத்ததுகார்முகமாவதோ
மெய்த்தனுக்கண்விசித்ததுநாரியோ
புத்தகத்திற்புனையுங்கயிறதோ. (ருo)

வலதுகையதுவாயழல்வாளியோ
விலகுநூல்களெழுதெழுத்தாணியோ
யலன்வழங்குபசுக்கள்படிக்கவோ
கொலைவிளைக்கவோகொண்டதுவாட்படை. (ருக)

வயமளிக்குதிடும்வாம்பரிவையமோ
வயர்வில்வேள்வியதன்முடிவேறிடும்
பெயர்வில்காட்சிப்பிரமரதங்கொலோ
வுயர்துரோணநீயூர்ந்திடுமூர்தியே. (ருஉ)

மார்பினூலுமறையவர்வேடமுஞ்
சேர்புகின்றனைதிண்பெருங்கைகளிற்
கூர்படைக்கலங்கொண்டாய்குரவநீ
பார்புரக்குமிறையோபனவனோ. (ருங)

அந்தன்சேய்களுக்காயமராடுநின்
மைந்தன்றானுமடிந்தனன்னாட்பினு
னொந்திரங்கலைநோலெனக்கொண்டனை
வெந்துரோணநின்மேன்மைநன்றென்றனன். (ருச)

தண்மைதீர்பரித்தாமன்மடிந்தவா
றுண்மைநாடியுதிட்டிரன்வாயினாற்
றிண்மைசால்படைபோக்கித்திகிரிமேல்
வெண்மைநூலணிமார்பன்விழுந்தனன். (ருரு)

சோகமுற்றுத்துரோணன்றனுவியை
யோகினுச்சிநெறிவிடவுன்னினுன்
பாகமங்கதிற்பாஞ்சாலனன்னவன்
சேகரங்கொளவாள்கொடுசென்றனன். (ருசு)

ஒல்வதன்றெனுநிட்டிரனுதியோர்
சொல்விலக்கித்துணைந்தவன்கூடுமுன்
கல்வியோகுடைக்கார்முகத்தேசிகன்
செல்வச்சேணியைச்சென்னியிற்கூடினுன். (ருஎ)

தருமநீடுதவநெறிகேள்விசால்
கிருபனேடுகிரீடியதுருல
நிருபனேடவனின்றனர்நோக்கினர்
பொருவிலாரியன்பொன்னிலம்போனதை. (ருஅ)

வஞ்சவாள்கொடுதிட்டத்துய்மன்னவன்
டுஞ்சவுற்றதுரோணன்றலேயினே
யெஞ்சவீர்ந்தனனிறறனதானேகள்
பஞ்சவர்க்குமகிழ்ச்சிபடாநததால். (ருகூ)

தூசித்தானேதுனுக்கெனச்சாய்தலுங்
கூசிப்போரினங்கூட்டங்குலேந்ததென்
பேசிக்காணெனப்பேதுற்றுக்கேட்டனன்
வாசித்தாமன்வலம்புரித்தாமனே. (சுo)

தூரகதாமனுநோன்றன்முகத்தெதிர்
குரவனிறறமைகூறுநத்துணிபிலான்
வரவுதேர்ந்துகிருபனேவந்தவா
றுரகேதனனேடுதென்வோதினுன். (சுக)

கிளக்கநாடிக்கிருபனுங்கேடிலா
வளக்கரும்பரித்தாமற்குனத்தனுந்
துளக்கிலாததுரோணனென்பானவன்
விளக்கநீடும்விரிஞ்சன்பகழியால். (சுஉ)

மூண்டபோரின்முரசக்கொடியினுன்
மாண்டதானேமடியவருத்தினு
னீண்டடங்கிலன்யார்க்குமிவனெனுப்
பாண்டவர்க்குமுகுந்தன்பகருவான். (சுங)

வேறு.

மெத்துதானேபடமுருக்கிவில்வலங்கொள்கல்விசா
லித்துரோணன்யாவராலுமீடழிந்துமீள்கிலான்
பொய்த்ததொன்றுதருமனின்றுபுகலிலன்றுபாயம்வே
ளுெத்ததில்லேயுவனிருக்கிலொன்றுமாவதின்றரோ. (சுச)

அருமைமைமுந்தனசுவதாமனுவிபோனதென்னவே
தருமமைந்தனேதில்வீறுதங்கு தன்கையாயுத
மொருவிவீழ்வனுண்மைவென்றியொன்றிடாதொழிந்ததேல
மருவலாளாநீதிவிட்டும்வன்மைகொள்வொன்றனன். (சுரு)

பைந்துழாயலங்கல்சூடுபகவனன்னபகர்தலு
முந்திவீமனசுவத்தாமன்முடிவுமேயினுமெனு
வுந்தையேயாடுமோதிருனவ்வுரையினுண்மைகொண்டிலான்
றநதவாய்மைசாற்றுமேகொறருமமைந்தவென்றனன். (௬௬)

புண்ணியர்க்கின்மைமந்தனின்றுபொய்ம்மைகூறுபுன்மைபு
நண்ணலாமைவென்றிகொண்டுஞாலமாளுநன்மையு
மெண்ணியங்கவ்வொன்றுமோதிடாதிருந்துசிறிதுபோழ்
துண்ணிவினைந்நீள்சலைந்திருந்துபாபவகையிரல். (௬௭)

ரேயிரமுமிடிபரிதிபோலநின்றுசெயவதின்றியே
சயிரனன்றன்மகிலைசெறறதந்திநாமநெருநகொண்
டமரினீடுமசுவத்தாமனுவிபோனதுண்மையே
நமரிறைஞ்சுயில்விறுக்தராதவென்னவோதினன். (௬௮)

அஃதுவினுஏயுனதுராமையாயுதங்கைவிலு
மதியினீடுமனமைநானமருணமைந்தனிற்றிலான்
கழ்கடாங்கொள்வழுகவபட்டதென்றுகட்டினாக்ந்தன
னெதிரில்கைக்துரோணனிட்டவேதிமீண்டுத்திலன. (௬௯)

சேருமேவுதிட்டத்துய்மன்மறலியென்றுசிந்தியா
யோகமார்சமாதிவைகியுந்தையுச்சிவழிதிறந்
தேகினன்விண்யார்விலக்குமெண்ணிடாதசிகைபிடித்
தாகநீடுசென்னியனனகூற்றுவடிதரிந்தனால். (௭௦)

பரிசிதென்றுகிருபனோடுபாண்மைநாடியாவிடைப்
பெரிதயர்ந்துணைந்துவீழ்ந்துபேதுறவிராகியே
தரிகொளாதுசண்கணீர்ததும்பிமணபுரண்டுதா
னரிதெழுந்துமன்றுசிந்தையசுவத்தாமனைறுவான். (௭௧)

படிறுகூறியெந்தைதானைவிடவிழைக்சபதகனு
முடியர்ந்தமூர்க்கனேனுமறையோருமுற்றவே
தடிவனின்றெனுண்மையையவர்சார்ங்கபாணிகாண்கவென்
றுடிவிலாதசபதவாய்மைதாககாமனோதினான். (௭௨)

இத்தகைத்தவெவ்விலதன்னிலெல்லையுந்துரோணனு
மத்தமித்துளாரதன்பினரசர்யாருமணுகினார்
சத்தமக்கமைநசபாசறைக்கணின்னதகைமையான்
மொய்த்தபோரின்முடிபுமாறுமூன்றுநாளினுற்றதே. (௭௩)

வேறு.

இகற்பின்னரிறந்தகன்னனிகலரவுயர்த்தகோமான்
முதற்பெயரவர்க்குநதங்கண்முரட்படைமுற்றினோர்க்கு
முதிட்டிரனேந்துமாறமுலுத்தரவினைகளாற்றி
யதற்பினரந்தமன்னனுமதிகொண்டுமீண்டான். (௭௪)

எஞ்சியதானையோடுமிருந்தனன்ஞாயிலெங்கு
மஞ்சனவெழிலிதுஞ்சுமத்தினபுரத்திலந்நாட்
டஞ்சமார்தவமியன்றுன்றடநகரவர்களோடுஞ்
செஞ்சடார்முடியறத்தின்சேய்க்கணிசிந்தைசெய்தான். (௭௫)

சொன்னவேலையிற்சூலபாணியாய், மன்னுகாலநீள்வயிரவன்புகுந்
தன்னலூர்தியோடளவகன்றநாள், வென்னிடாதவெம்போர்விளைத்தனன். (எக)

தயிருடைக்குமத்தனையதன்மைசால், வயிரவன்செயும்வன்மைகாணுறீஇச்
செயிரினான்முகனசெபபுதீமையை, யுயிர்நடுங்கின்றுள்கிமாழ்குவான். (அ0)

நாடுமெங்கணுநகைநிலாவெயிற், றூடுபோர்வயிரவனையன்றியே
வீடுநான்முகன்வேறிலாமையா, லோடுமெல்லையுமொன்றுகாண்கிலான். (அக)

அத்தனைக்கணைந்தாவதானதோர், மெய்த்தவேதியனவெள்ளைவண்ணமார்
வத்திரந்தனைவயிரவன்றெறிந், துயத்தகாலெனுவிசையினோடியே. (அஉ)

துள்ளியெங்கணுஞ்சோரிசோரவே, யொள்ளிசாயதன்னுகிரினாலதைக்
கிள்ளினானவண்கிளருமோதமப், புள்ளினானுயிர்போயினனரோ. (அங)

யாதும்யாவையுமிம்மெனத்தெறுந, தீதிலாவுருத்திரர்கள்சீறினால்
வேதனென்றுமாலென்றும்வேண்டவோர், பேதகிற்குமோபிழைபடாமலே. (அச)

மற்றவேலையில்வள்ளன்மீளவு, மற்றநான்முகனுவிநல்கினா
னுற்றகாலமென்றுயிரினோடய, விற்றகாலமென்றிருமைபின்மையான். (அரு)

உய்யுநான்முகனுமையொடங்குறும், பையபாம்பணிப்பரனைநோக்கினா
னையனானையாலறிவுபெற்றனன், செய்யசேவடிசென்னிசூட்டினான். (அசு)

வடிகொள்சூலவேல்வயிரவன்றனான், முடிவுறுவயன்முக்கணுபக
ணடிகடோறினானவலம்வநதாழிக், கொடியதண்டநேர்குரவனில்லையே. (அஎ)

அம்புயாசனத்தண்ணலன்றவண், வம்புகூறுதன்மருளைநாடியே
வெம்பியுள்ளநீர்விழிகள்சிந்தினன, றெம்பிரானருளைத்தன்மேயினான். (அஅ)

வாதைசெய்துமென்மாலகற்றினா, யாதையாவுனக்கின்னைநல்கலாற்
றாதையாயெலாந்தந்தளித்திடும், பேதைபாகவென்பிழைபொறுத்தநீ. (அகூ)

கிரணவெண்ணிலாக்கெழுவுவேணியா, யரணமூன்றுமன்றட்டவீரனே
மரணமுற்பவமாற்றியாளுநின், சரணமல்லதோர்சரணமுள்ளதோ. (கூ0)

ஆணுமாடெழிற்பெண்ணுமல்லவும், பூணுமின்பமும்பொருளுமாயினாய்
காணுமாறிலேனகனவுதன்னிலும், தாணுவேயுனையல்லதாணுவே. (கூக)

என்னைநல்கியேயென்றனுயிர், தன்னைநல்குவாய்சங்கபாணியா
மன்னைநல்கியவளரநல்குவா, யுனைநல்குவாரொருவாவேறிலாய். (கூஉ)

பதமகன்றிடாப்பணிபணிந்திடா, திதமொழிந்தமாலீட்டுமிவ்வெலா
முதவுகென்றியானுன்னையோர்ந்திடா, மதனைநந்ததும்வள்ளலுன்றனால். (கூங)

சதியிழைக்குநின்கழல்களேத்திடு, மதியிழைப்பதேயமையுமற்றினிச்
சதியிழைக்குமித்தரணிதநதிடும், விதியிழைக்கயான்வேண்டிலேனரோ. (கூச)

குனிதரும்பொருட்குன்றவில்லனே, பனிதருங்கிரிப்பவளவாயிதழ்
வனிதைபாகனேவரவுபோக்கிலாப், புனிதநின்கழல்போற்றிபோற்றியே. (கூரு)

நினையுநெஞ்சினோர்நேயநீரிலே, நனையுநல்லருண்ஞானமேனியா
யனையர்பாவகத்தணியுமாமலர், புனையுநின்பதம்போற்றிபோற்றியே. (கூசு)

இன்[illegible]சரின்னிறைமையெண்ணிடா, துன்னுமாலெனக்குற்றதாயினு
மன்னபோதுவந்தருளியாட்கொளும்,பொன்னிணைமலர்போற்றிபோற்றியே. ௯௭

மாற்றநெஞ்சமேமாயயாக்கையென், றேற்றமூன்றையமெனையுமென்றனு
லாற்றுபாரையுமுடைமையாதலாற், போற்றலுன்கடனென்றுபோற்றினன். (௯௮)

அயனையஞ்சலென்றருளியாயிடை, வயநெடும்படைவயிரவன்றருஞ்
சயமுவந்தவன்றன்னைநோக்கியே, கயனெடுங்கணாள்கணவனோதுவான். (௯௯)

பங்கயாசனன்பண்டையுள்ளவன், புங்கவன்பழிபோகுமாறுநீ
தங்குவெண்பலிதானென்னுணையா, லிங்கிவன்றலையோட்டிலேந்துவாய். (௧௦௦)

நீநடத்திடினீதிவையகங், கானடத்துமாலென்றுசாற்றியே
யானடத்தியேயம்பலத்திடு, மாநடத்தினன்மறைவுசெய்குவான். (௧௦௧)

பிரமகத்தியென்பேரிலங்கிபோ, லூரமிருத்தளாளொருமடந்தையை
வரமுடிக்கொணுவயிரவன்பினர்ப், புரமெரித்தவன்போகவேவியே. (௧௦௨)

மாண்டவந்தணன்மவலியோட்டிலே, வேண்டும்வெண்பலிவிரசம்வீரவோ
ராண்டினெல்லைகாமுற்றியானபி, னீண்டபாரின்மேலாடிநீளலாம். (௧௦௩)

கங்கைமூழ்கினுற்கழியுமிப்பழிப், பங்குநாலிலோர்பங்குநீங்கிடா
வங்கதன்பொருட்டாலவாசியிற், றங்குகந்தமாதனவிலங்கலில். (௧௦௪)

சென்றுநீசிவதீர்த்தமூழ்கினு, லன்றுபோகுமாசறவடங்கலு
மென்றுமூழ்கினோரிடரகன்றிடத், தொன்றுநாற்கருதுாயதத்தடம். (௧௦௫)

திடமிதற்குநீவேறுசிந்தனைப், படலகற்றெனப்பரிவினோதியே
வடமிழற்கணேமறைவிரித்திடுங், கடவுளுற்றனன்கயிலைவெற்பிலே. (௧௦௬)

காளகந்தரன்கயிலைசென்றபின், வாளிலங்குசூல்வயிரவன்றலைக்
கோளிலங்குமோடொருகைகொண்டுதா, ளுள்ளெலங்கணும்பலிநயந்தனன். (௧௦௭)

பின்படர்ந்திடப்பிரமகத்தியு, முன்புநீரெலாமூழ்கிவாணியா
றன்பினுடினனந்தணக்கொலைத், துன்பநீங்கிடச்சூழ்நெஞ்சினன். (௧௦௮)

கூறுமூன்றுதான்குளிர்பகீரதி, யாறுதீர்த்தபின்னலாணையான்
மாறுறுவிறல்வயிரவன்மனந், தேறுநீள்சிவதீர்த்தமேவியே. (௧௦௯)

வெய்யசூலமும்வெண்கபாலமுங், கையிலேந்தியேகயிலைவெற்பின்மே
லையன்மாத்தடத்தாடியேறியம், மையனீங்கினன்வயிரவப்பிரான். (௧௧௦)

முளரியான்பழிமுற்றுமற்றபின், வளரிகற்புகழ்வயிரவன்முன
முளரிதழ்க்கடியுண்டுவண்டினம், விளரிசூழ்தொடைவேணிமேவியே. (௧௧௧)

ஐயமெய்திடேலயனைநீகொலை, செய்யும்வெம்பழிசேரவிண்டதாற்
பையுடரவிப்பலிகொளோட்டினைப், பொய்யில்கங்கையிறகொணடுபோய்ப்புதை.

இனியெனுவருணல்கியேகினன், கனியைநேரிதழ்க்கவுரிபாலினன்
வனியினீடொளிவயிரவன்பினு,, நனிகொள்கங்கைகீர்நண்ணிநான்முகன். (௧௧௩)

ஒண்கபாலமற்றதனையோரிடைத், தண்குலாவுநீர்தனிலமைத்தன
னெண்கொள்பாரெலாமந்தவெல்லையைத், தெண்கபாலதீர்த்தமென்னுமே. ௧௧௪

வேறு.

எவர்நவிற்றுவாரிதுசெவிக்கொள்வா, ரவரிடர்ப்படாரளவிடற்கொணு
வுவமையற்றசீருதவுமுட்கொள்வீர், சிவதடத்தினீர்செறிதவத்தினீர். (ககரு)

சிவதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் கசஅக.

# சங்கதீர்த்தச்சருக்கம்.

வங்கதீர்த்தமூர்த்திநீடருண்மறைவியாதனைவாழ்த்தியே
துங்கதீர்த்தர்சூழாக்கைநாடுபுசூதமாமுனியோதுவான்
பொங்குதீர்த்தமுடிப்பரன்சிவதீர்த்தமூழ்கியபுனிதர்பின்
சங்கதீர்த்தமடைந்தாழ்ந்தவர்சார்புதீர்த்ததவத்தினீர். (க)

சலிலமற்றிதுதேசிகன்றருதந்தைதாயிவர்தங்கள்பால்
வலியுரைத்திடுமறமுமன்றிமறந்தகுற்றமுமாற்றிடு
நலிவுதீர்புனல்சங்கதீர்த்தமென்றுமமுற்றதுநற்றவ
மொலிகொள்சங்கன்முழங்குசங்குடைமாலையுன்னியுஞற்றலால். (உ)

சொற்சிறந்தவோர்காதையிங்கிதிலுண்டுகேட்டவர்துகளிலா
வெற்சிறந்தசிறப்பின்மேவுவரிகல்விருப்பிலன்யார்கணு
நற்சிறந்தருணூரிமன்பிரமசயானநயாதுளான்
வற்சநாபனெனும்பெயர்த்தவன்மறைவழக்குணர்மாண்பினான். (ங)

ஒற்றுமைக்கொளுநெஞ்சனுய்த்தனதூடசநாப்பணுழந்திடு
மற்றுமினையுயர்மாதவத்தினளப்பில்காலமமைந்துதான்
சற்றுமெய்யசைவின்றிருந்தனனன்றவன்கிளர்தனுவெலாம்
புற்றின்மூயதுவேரினுட்படுமுட்புறக்கனிபோலவே. (ச)

மேனியெங்கும்வளைந்தெழுந்தவன்மீசமூடுதனுடலான்
ஞானிருந்தனனுள்ளிருந்தொளிர்சற்பரப்பொருள்போலவே
வானிலிந்திரனிங்கிவன்றவமாண்புதேரியவந்தவண்
பானியந்தருமுகில்கண்மாரிவழங்குமாறுபணித்தனன். (ரு)

மாலினீட்டமிருண்டெழுந்திடைவெளியிலாமன்மறைத்துவான்
மேலையண்டகடாகம்விண்டதன்மேல்வயங்கறல்வீழ்வபோற்
காலவீற்றிலிடித்துமின்னிநெருங்குதாரைகள்கான்றமேற்
சாலுமாதவன்வாளிமாமழைதாங்குவீரரிலோங்கினன். (சு)

கரியகொண்டன்மணிக்கடத்திரள்காலுமாமழைகடவுளாச்
சொரியும்வெண்பயமாகவாலிகயேமாமலராகவே
யெரியுலாவுமிடிப்புகழ்ச்சுடர்மின்கொடிந்திரனென்பவன்
புரியுமர்ச்சனைவற்சநாபமுனிப்பிராற்கெனல்போன்றதால். (எ)

துழப்பிலான்சிலைவடிவின்மன்னியதோற்றநாடிபுதுவசலன்
னிடிப்பிறைசெவிடிருசெவிப்படவெறியுமூதிரின்மெய்யெலாம்
பொடிப்பினீடுக்கமுற்றுடல்பொங்குவெக்குளிமிருதியாற்
பிடிப்புறுதவிதிர்ப்புறம்படிபீழைசெய்தனபின்னரும். (௮)

வெருவுமாறுருமேறுபுற்றதன்மீதுவீழ்த்தினவீழ்தலு
முருவமாரநலுச்சியெங்கணுமுடைவுபட்டனவொல்லையிற்
பொருவிலாமுனிமெய்ம்மனைதருணீர்புறம்பொழிவுற்றபோற்
றருவினீடுதவந்தழைத்தனனருகுசாரதநதருமமே. (௯)

அசைவிலாதிவணமுயலுமாதவமென்கொலென்றுநிசயமிரும
திசையுமாறுளமெண்ணியாகமனைந்திடாவகைபெருமையின
நிசையினீள்வடிவுறவுமற்றவனவுறமபடிசேர்பறிழித்
தசையினீடிபிறக்கினனமழைநாங்கிநின்றதுதருமமே. (௧௦)

உறுவர்காணிரைவரைகவித்துமுன்மாலளித்தகையொப்பவே
மறுவிலாமுனிமேல்விழாவகைமழைதடுத்ததுசருமமும
பிறழ்கடாவதின்முதுகின்மாமழைபெய்தவாறெனவுலகெலா
மறையுமுன்மொழிதானுமிக்கதைபறரியாயினதாமாம். (௧௧)

அவசமின்றெரிர்யற்சநாபவருநதவன்புனையவிமலைக்
கவசமானவன்மீகமேலருடருமமின்றிங்காலையிற
றிவசமேமொடுமழையொழிந்ததுதருமதேவதைசேர்ந்ததாற்
றவசயம்புனைமுனியைவிட்டயறங்குபுறநெருசாரினில். (௧௨)

நளியிலாமுனிபின்விழித்தவனுடிவன்றிசைநான்கையுந
துளியுலாமழையானனைந்தனவெங்கும்யாமொருதுளியிலேனு
ரளியிறுலயிருய்நதனம்பிறிதென்றெறுவவறைய்துவான்
களியினீடுகருங்கடரியயலொன்றுநின்றறுகண்டனன். (௧௩)

கால்பரித்துநிலத்திறங்கியகாளமேகநிகாக்கிடு
மால்பரித்தகடாவைநாடுபுவற்சநாபன்மனங்கொள
நீல்பரிதகிடுமினையதேயெமதுயிர்பரித்துநிலையதாம்
பால்பரிதகிடுமதியிலாவிதுதருமமுன்னியபணபெறு. (௧௪)

மாய்வுறுதெமதாவிநல்கியமகிடமற்றிதுவனைவிலா
வாயுளெய்துகவெனறுவாழ்த்தியகன்றுவேறயல்போகியே
தூயநோன்புதொடங்கினன்றருமத்தின்மெய்யைசுருசிபோன்
மேயமெய்ம்மயிர்கினைபொடித்திடமிக்கசோமகிழ்மேயதால். (௧௫)

வேறிடத்துறையிருடிதன்மனமெய்பபொருட்டனிவெளியிலே
யேறிடத்தெரியாமைகண்டிஃதென்கொலென்னவிரங்கியே
மாறிடப்புரிபாவமல்கிடினெஞ்சுசஞ்சலமருவுமாற்
கூறிடப்புகிறநீமையோருழைநுடியிருநததமில்லையாம். (௧௬)

உழிதர்கிற்பதென்னுள்ளமென்னவுணர்ந்துபன்முறையுன்னியவ்
வழிதனைத்தெரிகுறறுநெஞ்சமருண்டுதன்றனைவைதுகொண்
டிழிபுளைத்திலமிவ்வுடற்றெருடர்பென்றுபேதைமையெய்தினே
மழிவினன்றிமறந்தபாதகநங்கணெய்தியதையுகோ. (௧௭)

மாரிகாத்துயிர்வாழவைத்திடுமகிடமற்றிதைவழிபடேம்
பூரியர்க்குளிழைத்தநன்றிபுலன்கொளார்மிகுபுன்மையா
ரோரியற்றிருமறைகளிற்பரிகாரமில்லையிதற்கிவர்க்
கோரியற்கதியுலகுமங்கிலையுறவுமிங்கிலையுணரிலே. (௧௮)
எருமைசெய்திடுநன்றிதன்னையிழித்ததீவினையாலெமக்
கொருமையுற்றிலதுள்ளமியாருபகாரமாற்றியதுணர்கிலா
ரருமைசேரரணுகநம்பியடைந்துளாரையழித்தவ
ரிருமைசேர்பயனொன்றுமெய்திலரெய்துவாரிருணிரயமே. (௧௯)
யாப்பின்மன்னியநன்றிதன்னைவிடுத்ததீமையிதற்குயி
ரீப்பதேபரிகாரமென்றிடுநீதிநூலருடாதைதாய்
காப்புநேர்கிலர்குரவர்தக்கினைகாதலோடுவழங்கிலார்
தீப்பவங்களுமாற்றுநன்றயர்திங்குநீங்குயிர்நீர்க்குமால். (௨௦)
மடிவதன்றியிருப்பதில்லையிம்மண்ணினன்றிமறந்திடு
முடிவிறீமையினோடுமாவிமுடிக்கிலெய்திடுமுத்தியென
றடியிலங்கொளிமாமணித்திரளாடகக்கிரியுச்சிமேற்
படியின்மாதவனேதியுன்னினன்வீழ்ந்திடும்படிபடியின்மேல். (௨௧)
பேரினோடுபுறங்கொடாருயிர்பொருண்மையென்றுபுலங்கொளா
வீரர்போன்முனியிறுதிநாடியமேன்மைகண்டிருணமேதியின்
பாரமாலுருவிட்டுவந்தெதிர்நின்றுமாதவபதறல்யான்
யாரையும்புயர்மேன்மைசெய்திடுதருமமென்னவியம்பியே. (௨௨)
உனைமகிழ்ந்தனம்வற்சநாபவிருத்தியாயுவினோடுமிந்
நனையெனுமிருகாலநின்னிகர்தருநர்தாமிலர்சரணிமேற
றுனியினோடுயிர்நீத்தலேபரிகாரநன்றிதுறந்தவர்க்
கெனினுநல்லறமாற்றுநின்கணுபாயம்வேறுளதிருடிகேள். (௨௩)
கந்தமாதனவெற்பிலேமுனிசங்கனெண்ணுடைகணனைது
தந்தவாவியின்மூழ்குநன்றியயர்த்ததீமைகளைந்துமா
லிந்தவாய்மையினையமெய்தலையென்றுகூறியதிருடிகேட்
டந்தவாவியினாடியவ்வினைநீக்கினின்மலனாயினான். (௨௪)
அங்கண்மன்னியனந்தகாலமகண்டவாழ்விலமர்ந்தனன்
சங்கவாவியின்மேன்மைதானிதுநன்றிவிட்டவர்தாங்களுங்
கொங்கைவாய்வழிபாலளித்திடுகோதைதாதையர்குரவனும்
புங்கவன்பழிபுகலுவார்களுமுய்வரிப்புனல்போற்றினால். (௨௫)
மொழியுநால்வர்தமக்குமுன்மனுநான்மொழிந்திடுமுறைமையா
லழிவதேபரிகாரமாம்பவமஃதகற்றிடுமற்புதங்
கெழுவுசங்கதடத்துனிற்கரிதாங்கொலோபிறாகேடெலா
மொழிவுசெய்குதல்பூரணப்பொருளேரீநிலாவருமுரவிர்காள். (௨௬)
வேறு.
நீடுசீர்பயில்சங்கதடத்தினீர்நீர்மைகூறுநிறைந்தபுகழ்ச்சிசால்
கேடில்காதைவிரும்பிநவிற்றுவார்கேள்வியூடுபுகுஞ்செயல்பெற்றுளா
ராடினோரொனநன்றியயர்த்தலாலாயதீவினையங்கணகற்றியே
வீடிலாதுவிரிஞ்சபதத்திலேமேவியாவர்விளங்கருண்முத்தரோ. (௨௭)

சங்கதீர்த்தச்சருக்கமுற்றிற்று.
ஆகதிருவிருத்தம் ௧௫௦௮.

குறுகிமுனிவனுளங்குளிரக்குளிர்நுண்டிவலைமிசைவிசிறி
மறுகுமனந்தீர்மாதவநின்மனுவின்வலியால்வந்தடைந்தேம்
பெறுகவேண்டுங்காரியநீபேசென்றிடலும்பெருந்தவத்திற்
றறுகண்மிகுந்தோன்விழித்தெதிருந்தரங்கநதிகடமைக்கண்டான். (கo)

கதிகளுணர்ந்தோன்கண்டுருகிக்காதல்பெருகிக்களிசிறப்ப
நதிகளவற்றிற்கருக்கியநீர்நல்கிவேண்டும்பலிநயந்தான்
மதிகொளுலகிலலகுபடாவாழ்வின்மலிந்தமாண்பதனா
லதிகரவருமன்புடையாரளிக்குஞ்சிறிதுமுவப்பாரால். (கக)

பூசையிழைத்தபின்முனிவன்புகல்வான்யமுனைபுனற்கங்கை
யாசையலைக்குமலைக்கையையென்றறையஞ்சலங்காளசலமிதில்
வாசம்புரிமினெஞான்றுமண்ணீரகழ்ந்துவருமிடத்தின்
வீசும்புனலைநும்பெயரால்விளம்பக்கடவதுலகென்றான். (கஉ)

இன்பங்குலவுநதிமூன்றுமிசைந்துகரந்தவிமையவரை
மின்பங்கதனைத்தனதுபங்காவிரும்பும்பங்குமெயம்முனிவன்
றன்பங்கமிலாத்தவவலியாற்சாந்தநதிநீர்தனிலாடு
மன்பங்குடையாரருளுடையாராவாராகாரறிவில்லார். (கங)

மக்களுருவங்கொடுதோன்றிமறைந்தநதிகளன்றுமுதன்
மிக்கவுலகம்புகழ்ந்தேத்தவிளக்கம்படைத்தவவற்றின்பாற்
புக்குமகிழ்வுற்றினிதாடும்புனிதமனிதர்க்கதுபோழ்தே
துக்கமகலும்பிறவிமருடோனறுதொன்றுஞ்சுடர்ஞானம். (கச)

இருடீரியக்குவன்றனுமியம்புந்தனதுமந்திரத்தின்
கருடீர்வலியால்வரவழைத்தகாமர்யமுனைமுதன்மூன்றும்
வெருடீர்மனத்தால்வேறுதவமவிட்டப்படிநதுவிருப்பிரோடு
மருடீர்கந்தமாதனத்தில்வைகுறுநருந்தானமற்றநாள். (கரு)

சானசுருதியபிதானந்தரணிநிருபன்புத்திரன்சே
யானமுறையாற்பவுத்திரனென்றறையும்பெயருமடைந்துள்ளான
றீனர்விழைவுதீர்க்கையிறுறுசிரத்தாதேயனெனப்பட்டான
மேனிதழைப்பவட்டுதவிவெகுபாக்கியனுந்தானானான். (கசு)

பரிசிலாளர்வயினளவில்பரிவுங்கொடையும்பயின்றுடைய
வரசன்படிமையதுபுனையாவறவோரனையானவனாளு
முரசுமுழங்குங்கொடிவீதிமூரிநகரம்பெருநடவை
தனைசெய்மூதூர்பஃறேயஞ்சதுக்கமுதலதலமெல்லாம். (கஎ)

பருப்பின்பொருப்புநெய்நதியும்பழத்தோடலம்பும்பாற்கடலும்
விருப்பினறியகறிவகையும்வேண்டும்பிறவுமுளவாக்கிக்
கருப்புக்குறையுமுயிர்வளர்க்குங்காதலனைபோற்கரைந்தன்பாற்
றிருப்பிநிறுவிவருவார்க்குஞ்செல்வாரெவர்க்குஞ்சிறந்தளிப்பான். (கஅ)

அன்னமிலதேலாருயிர்கட்கசைவின்றுருகுமாகையினாற்
றுன்னுமடிசிறருஞ்சானசுருதியெவ்வையுந்தொடுத்தியக்குந்
தன்னோர்வடிவந்தானாகுந்தானத்துயர்ந்ததகைநாடி
மன்னுநருமாதவரும்வானோரெவருமகிழ்ந்தாரால். (ககூ)

### வேறு.

நாளுமகிழுமமரர்முனிவர்ஞாலவனிதைநலனுளுந்
தோளுமரசர்மவுலியிடறுசுடர்கொள்வீரவணைகழற்
றாளுமுடையவரசசானசுருதிதன்னையன்பினு
லாளுமுறைமைகருதியெகினமாயினுர்களனைவரும். (௨௰)

அஞ்சவுருவமாகிவிண்செலளவிறிங்கண்மாலைபோற்
றஞ்சவமரர்முனிவர்நீடுதகுதிமருவுதொகுதியின்
புஞ்சமறிஞர்பரவுசானசுருதிவிசுபுகழ்மைபோல்
விஞ்சும்வேணிவிரவிலுன்னிவிண்பரந்துபோனதால். (௨௧)

மேகமுட்டுமேனிலைக்கண்வெண்பளிங்கினீடுசா
லேகமுற்றிருந்தசானசுருதிமீதெழுந்துதாம்
போகலுற்றபோதுபின்செலபுள்ளிலொன்றுமுன்புகும்
தோகைமிக்கவெகினமொன்றைநாடியொன்றுசொல்லுமால். (௨௨)

நிற்றிநிற்றிநீபலாக்கரீடுசீரமராளகா
வெற்றிபோடுவிரசுசானசுருதியிந்தமேனிலத்
துற்றுளானிவ்வாறுதானுணர்ந்திலாய்கொலுள்ளமேற
சற்றுமெண்ணிலாமலந்தர்ம்மிலேகுகினறியால். (௨௩)

இரவிகோடிசிறுகமல்கியெங்கணும்பரந்துபோய்ப்
பிரமலோகமுழுதுமுண்டுபெருகுசோதிருபனைப்
பரவிடாதுபோதனன்றியன்றுமிந்தைபண்ணினுல்
விரவுதோகைவேவவீசும்வெந்தணீடுகாநதியே. (௨௪)

என்னலோடுமெகினராசனிஃதுரைக்குமோதிமந்
தனைநாடியழகிநம்மசாற்றும்வாய்மைசாலவு
முன்னையோரிலுன்னைநோமுதுக்குறைந்துளாரில
ரென்னையோமருட்கைநின்னையெம்மைவிட்டடைந்ததே. (௨௫)

சிறியனுண்மைதெளிகிலாததிண்சிலைக்கொணஞ்சினுன்
வறிதிலூனுயிர்த்துலாவுபுல்லுணுதமானஞு
னறிவிலாதமருளன்முகனவலன்வஞ்சன்யாரினும்
வெறியனென்கொலிவனையெண்ணிவீணின்மேன்மைகூறினுய். (௨௬)

அரியதாயவறனினுண்மையதனிலொன்றுமறிவதற்
குரியனல்லனமுனிரயுக்குவன்பிறங்குமுலகின்மேற்
பெரியனென்னவமலஞானவீடுமேவுபேறிலான்
றிரியுமட்புனைந்தபாவைபோன்மயங்குசெய்கையான். (௨௭)

அந்தவந்தணாளன்மெய்யகண்டசேரியமாருஞ்
சிந்தைகோடலர்துவானுடுக்குழாந்தெரிக்கினு
மிந்தமண்ணெழுந்ததூளையெண்ணினுலுமிருடிதான்
றந்ததானதருமமேருவெண்படாததகையதால். (௨௮)

இறையினீடுமிவனிழைத்ததருமம்யாவுமீறுறும்
பிறையிறேடுகெட்டும்வேணிநூரணிலன்புபெற்றசீர்
மறையினேன்மனத்தினுண்மைஞானமென்றுமாய்வுறு
தறையநாடின்முனிரயுக்குவன்றன்மேன்மையிறைதிரீ. (௨௯)

எற்பிறங்குமிரவிநிற்கயார்பழிச்சுவார்விளங்
கற்பமன்னனிவனைநீவழுத்தல்செய்யிலறிஞர்தா
நிற்பழிப்பர்விடுதியோகவாணர்தாமுநிகரிலா
ரற்பவத்தின்முடவனாகியுறையுமந்தவுறுவர்கோன. (௯௦)

இறைத்தெழுந்துலாவியோடும்யமுனைகங்கைசயைகடாந்
திறைக்கரங்குவித்தெழுந்துசெய்யகந்தமாதன
வரைக்கண்வைகுமாறுமுன்னமற்றவன்றன்வாயினு
லுரைக்குமந்திரத்தின்வன்மையாலழைத்தவுயாபினுன. (௯௧)

புவனமூன்றிலுயிர்கள்செய்தபுண்ணியத்தின்வகையெலாந்
தவனிரம்புமுனிரயுக்குவன்புரிந்ததவறிலா
நவநயங்கொடருமராசியுள்ளடங்குநம்பிரான்
சிவனகண்டபூரணத்திலுலகடங்குசெய்கைபோல். (௯௨)

யாதும்வாயிசைக்குமெனனிலின்பமொன்றுமெயதிடாப
பேதைமன்னனின்மைமேன்மைபேசியெனகொல்பெறுதிநீ
மூதுணர்ந்தமுனிரயுக்குணசிறந்தமுதன்மையே
யோதுகென்னவோதிமிக்கவோதிமம்மொழிந்ததால். (௯௩)

இனனவாறுதலைமைசாலுமெஙினியம்பிநின்றதன்
பின்னரந்தமுனிவர்தேவர்பிரமலோகமேவினூர்
சொன்னவாய்மைகேள்விபுக்கபோதுசானசுருதியு
மன்னமோடுமன்னமாதவன்கணன்பனாபினன. (௯௪)

ஆகநொந்தழுங்கிவாடிமீளமீளவயர்வொடும்
போகியென்னவிண்டுமூச்செறிந்துநின்றுபுட்சொலும்
யோகியானமுனிரயுக்குவன்பகத்தையுறமிகும்
வேகியாகியிரவுமுற்றும்விழியுறங்கலின்றியே. (௯௫)

அள்ளல்வாரியகிலமாளுமரசனாகுமெம்மையிவ
கெள்ளினாறுமுடவனாகுமிருபிறப்பினவனையே
புள்ளினங்களாமுமைபோறரிசைப்பவாதலால்
விள்ளுவேனிவ்வுலகுகாவல்விடுவனில்லின்வேட்கையே. (௯௬)

முடவனானமுனியையெய்திமுந்தைஞானமடையவே
கடவனென்றுநெடியவேலைகயினீந்துவார்கள்போற்
படரிருட்கழித்தெழுச்சிபாடுவார்கள்பாடல்கேட்
டெல்வருந்துன்ரின்மெல்லவுற்றெழுந்துபின்னரோ. (௯௭)

மாதலிக்குவலவனாகும்வன்மைசாலும்வ்லவனைக்
காதலிற்கரைந்துமைந்தகடிதுதேரிலேறிநீ
வீதலிக்குவேடனக்குநல்குமுக்கண்மெய்ப்பொருண்
மூதலிக்குமுனிவர்மேவுபன்னசாலைமுழுவதும். (௯௮)

ஆலயங்கள்வரைமுடிக்கரந்தணாளர்வாழுமூர்
வாலுகந்திரண்டகுன்றமானுலாவுகானக
மேலையோர்கள்பிறரிருக்கைவிரிதரங்கநதியிடஞ்
சோலையெங்குமிடைவிடாதுதுனைவிரேடுநேடியே. (௯௯)

பங்குவாயொரபண்டிமீதுதிரியுமிக்கபடிமையா
னங்கமேயபிரமமன்னவறிவனெண்ணிலுறலுளான்
றங்கஞானமுனிரயுக்குவன்பிறங்குதூய்மையா
னிங்குளானெனத்தெரிந்துவருதிபோதியென்றனன். (௬0)

சூதமுடியரசன்வாய்மைதுண்டுணெனக்கொடிஞ்சியின
மீதுகொண்டுதேடியெங்குமெய்த்தளர்ந்தொர்வைகருன்
மோதுசீதவேலைசூழ்முழங்குகந்தமாதனச்
சோதிவெற்பிலெய்துஞானமுனியிருந்தசூழலாய். (௬௧)

உருவையூடுதிரியுமம்பருணர்வகன்றபிரமமென்
றருடயங்குமிறையவனேதமமலமேனியிங்கெதுப
பொருடயங்கும்வலவனுடியுலகுசெய்தபுண்ணியம்
வருடைதங்குகந்தமாதனக்கண்வைகலெய்யுமால். (௬௨)

எனநினைந்துவிழிகுளிர்ப்பவின்பமோடுகண்டுதான்
முனிரயுக்குவன்றனமுன்புசென்றுபோக்கின்முண்டகக்
கனைகழற்பணிந்துபோற்றிவினயமோடுகாதலாற
பன்வநின்னைநாமமென்கொல்பகருவார்கள்பாருளார். (௬௩)

போற்றின்வருதருமம்பாதுபுகலுகென்னமாதவன்
சாற்றுவார்களெனைரயுக்குவன்சயுக்குவனெனுந்
தோற்றுபாரினோர்களென்றுசொல்லினன்குறிப்பினு
லேற்றபாகனினிதுகூறியிருடியெண்ணமெண்ணுவான். (௬௪)

மனைநடாத்துநெறியினெண்டுமாண்பொருட்கண்வாஞ்சையிவ்
வனைநடாத்துமருளின்மாதவற்கெனவறிந்துதேர்
தனைநடாத்திவலவன்வல்லைவந்துமுன்புதன்னையவ்
வினைநடாத்துவேந்தனோடுசெய்லெலாம்விளம்பினன். (௬௫)

கூறுசூதன்வாய்மைநெஞ்சுகொண்டுவந்துகோவுமங்
காறுநூறுகோவும்வாவுமாடல்வாசிநீடுமோ
ரேறுதேருமேமபாரமொன்றுமிந்தமூன்றொடு
மூறுகாதலோடும்வல்லையுறுவர்கோனையுற்றனன். (௬௬)

உற்றிறைஞ்சிமுனிரயுக்குவன்பதத்திலுவகையாய்
மற்றைமூன்றுவகையுமுன்னர்வைத்திவற்றைவாங்கிநீ
யிற்றையவகலிருளகற்றியென்னையாளுகென்றனன்
சொற்றவாய்மைகேட்டிலிங்கிதனைவினோடுசொல்லுவான். (௬௭)

ஈறுவென்றளப்பினுளிருக்குமிங்கெனில்லமிப்
பேறுகொண்டுநிறையுறுதுபேசவேண்டின்மற்றித
னூறுகொண்டதொகையுமற்பமென்றுவேதநோக்கியே
தேறுமுண்மைமுனிரயுக்குவன்பரிந்துசெப்பினன். (௬௮)

பாலின்வேலைதிவலையொன்றுபடவகன்றுதிரையொழிந்
தேலுஞானவின்பவாரியளறுநீங்கலில்லெனிற்
சேலுலாவுகடலுடுத்தசெகதலப்பொருட்களாற்
சாலுமோனமுனிவர்சிந்தைதானிறைக்கலாகுமோ. (௬௯)

கழைகொள்சாறுநிம்பநெட்டிலைக்கொள்வாரிகாஞ்சிரம்
பழம்வருக்கையுதவுமிக்கபழமரங்கொள்பரவையா
மிழைகொளேமநாட்டரம்பையென்னுமங்கையாயினும்
விழைவதில்லையாயின்மேருவெற்புமற்பமாகுமால். (ருo)

மாடியந்தயங்குமார்பின்மன்னன்மீண்டுமற்றிவை
கோடிகோடலொழிதிநீகொடுக்குமின்பபூரண
வீடிலாதமெய்ப்பொருட்குவிலையிதன்றுன்மெய்ப்பதஞ்
சூடியுண்மையருள்புரிந்துதொண்டுகொள்ளுகென்றனன். (ருக)

பகருவாய்முனிவிறைவியரசன்வாய்மைபரிவுற்
றங்குமில்லின்வாழ்வுபாவதருமமென்னுமிவைகளி
லிங்கியாவர்நெஞ்சுதூய்மையெய்துவார்களவர்களே
யங்கண்ஞானநிலைமைசேரவருகராகுமவர்கடாம். (ருஉ)

இறைவநின்கணிற்களிச்சையில்லையேனுமிருவினைத்
துறையகன்றிலாயிரண்டுமுற்பவங்கள்சூழுமா
லுறையும்யோகவாணரல்லரவையிரண்டுமொழிகிலா
ரறைவதுண்டுநீயடைந்ததெம்மைநம்பியாகையால். (ருங)

வாழ்பொருப்பினீடுகந்தமாதனத்தின்மன்னமூன்
றூழ்புனற்றடங்கண்மேவுமவைகடங்கணாடினோ
ரூழ்வினைத்தொடர்ச்சிசாடும்வீடுநல்குமுதவிடுஞ்
சூழ்வுபெற்றபலவுநெஞ்சுதூயமையாகுமக்கணம். (ருச)

பின்னையுன்கணுழிவுருவகண்டவாய்மைபிறழ்விலா
வொன்றையோதல்செய்துமென்னமன்னனுள்ளமுவகையாய்
மன்றல்வாரிசத்திருக்கண்மலர்மலர்ந்துவல்லைபோ
யன்றவ்வாவிமூன்றுமாடியமலநெஞ்சனாயினான். (ருரு)

ஆனபின்பசும்புறுதடங்கவிண்டகன்றவச்
சானகீனசுருதிவந்ததனதுஞானதேசிகன்
மோனவாய்மைமுழுதுணர்ந்தமுனிரயுக்குவன்றனைக்
கானல்வாரிசம்பணிந்துகாதலோடுபரசினான். (ருசு)

ஒருவராலுமடையொணாதவுணர்வுபெற்றவுறவனை
யிருவராய்வினீடுசோதியிமையமங்கைநாயகன்
கருவராதகதிவழங்குகழலலாதபிறவெலா
மருவராவகண்டஞானியாயினனவ்வரசனே. (ருஎ)

வேறு.

இதாயுக்குவன்கண்டமூன்றுவிநீரிறைபவுத்திரன்சென்றுதோய்ந்தாசையா,லதுவெனப்படுபங்கநீங்கிநிலாவருளையுற்றிடுந்துங்கமாண்காதைதான், முதுமறைப்பலந்துன்றுநோன்போவிலாமுனிவிரிப்பழஞ்செஞ்சொலிங்கோதுவா,ருதுசெவிக்கொளும்பண்பினுங்கேண்மையோருவர்பிறப்பகன்றென்றுகாண்யார்களே. (ருஅ)

த்தீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் கருசுசு.

அரியசூதனறைவதுகேட்டலுந், திரிபிரேனுடுவிகற்பமுஞ்சேர்கிலாப
பெரியமாதவராயம்பிறநததற், குரியசெய்கைவினுவியுரைசெய்வார். (கஎ)

தத்துவத்தொகையாயசயந்தன, முய்த்துருட்டுமுணர்வுடைச்சூதனே
மெய்த்தவேதவியாதன்விருபபினுல், வைத்தஞானநிதியுடைவள்ளலே. (கஅ)

ஓதுகின்றபுராணமீரொன்பதால், வேதமாண்பொருள்வேறபடாவகை
யாதமுண்மையியம்புகின்வாயினும், பேதையோரிறபிறநதநோர்வாசகம். (க௯)

கோவிராமன்கொடுமரக்கோடிநீர், மேவினோர்க்கிலைவேறுளநீர்களா
லாவதென்றனையம்புவியோர்பிற, வாவுநீருடைந்தாடுதன்மம்மரோ. (உ0)

எங்கணெஞ்சமிரங்கவினாக்செழு, சங்கையின்றறடைத்தருள்சாற்றெனத்
துங்கமாதவச்சூதனையேந்திரு, ரங்கண்மைவுமுனிவரவொலாம். (உக)

தொன்றுமுற்றுணர்சூதனவிற்றவா, னன்றுசாலவுநான்மறையீர்கேள்
தன்றுகேட்டனுரதனுதியை, யின்றுகேட்டனிர்கீவிரியம்புகேன். (உஉ)

மறிகருங்கடல்சுற்றியவையமே, லெரியுமொண்புனல்யாத்திரைக்கேகுவார்
நெறியினேர்படுநீள்புனலாலயங், குறியினுடுதல்கும்பிடல்வேண்டுமால். (உ௩)

வணங்கலாடன்மறந்தனர்போயினு, லிணங்குநீமையின்வீடவர்க்கில்லையாம்
பணங்கொள்பாந்தளின்மேற்பயில்பாரக, வணங்குதானுமவர்தமையெள்ளுமால். ()

இக்கணக்கிலிரும்புனலாடுவார், சக்கரத்தடமாதித்தடமெலாம்
புக்குமூழ்கியபின்னைப்புயலன்னுன், மிக்கவார்சிலைக்கோடிநீர்மேவுவார். (உ௫)

என்னிமித்தமெனிலவற்றெஞ்சிய, புன்மைபள்ளனபோதற்பொருட்டதா
மன்னமுத்தர்க்கவணமைகமின்றியே, பின்னையொல்லைபெயருதல்வேண்டுமால். ()

இராமனும்முனமிப்புனன்மூழ்கியே, யிராமநாதனைநாட்டியிடரொழித்
திராமலேகினன்யாரொருமாகையா, லிராமல்வேண்டுமிறுருடைந்தோர்க்கெலாம்.

வானயாறதுமாண்பிலங்கீண்டெழீஇத், தானிலத்தில்வெளிப்படுந்தன்மையான்
ஞானதாரகநற்பிரமப்பொரு, ளானராகவனங்கிதிலாடலால். (உஅ)

சூட்டுந்திங்கட்சுடர்முடிவேணிமே, லாட்டியப்பிரமக்கொலையண்டிடா
தோட்டுஞ்செய்கையுளங்கொண்டிராகவன்,கோட்டுநதண்சிலைக்கோடியினுக்கலால்

கோலும்வார்சிலைக்கோடிப்புனல்வள, ஞாலமேலெவர்நாடிநவிற்றுவார்
மாலுமற்றிதின்மாதுலற்கொன்றத, லைடைந்தபழிவிடவாடினுன். (௩0)

கண்ணனாடினன்கஞ்சன்பழிகழீஇ, மண்ணினுர்க்குவரந்தருமாறெனு
வண்ணன்மாண்புடைச்சூதனருளலு, மெண்ணின்மாதவர்யாரும்வினவுவார். ௩க

யாதவக்குலமின்புறத்தோன்றினேன், மாதுலக்கொலைசெய்திடவந்ததென்
னேதிடப்புழிகோடியிலுறறதென், சூதசொற்றருளென்றனர்சொல்லுவான். ௩உ

அதுவிரும்பியறிமினறவிர்காள், விதுவிரும்புவிளங்கொளியானுளன்
யதுவிரும்புமிருங்குலவேந்தல்பேர், மதுவிரும்புமலர்த்தொடைச்சூரனே. (௩௩)

சேயவற்குத்திறல்வசுதேவனென், றூயகாளையவன்மனையாயினு
ளேயுமோரொழிற்றேவகியென்பவ, டேதேவகன்றன்வயிற்றோன்றினுள், (௩௪)

வேறு.

ஆனகதுந்துபிதேவகியென்பாளவளோடுங்
கோனகர்போதும்போதினில்வஞ்சங்கூர்கஞ்சன்
றானகரேறின்சாரதியானான்றனைநோக்கி
வானகமீதோர்வாணியெழுந்ததுமருள்கூர. (௪௫)

கேண்மதிகஞ்சாநின்னுடனேதோன்றுங்கிளர்சோதிப்
பூண்மடமாதைமைத்துனனோடும்பொற்றேறி
லாண்மையினோறறிக்கொணும்படர்நதாயவணல்கு
மாண்மலிவீரமக்களிலெட்டாமைந்தன்றான. (௪௬)

உன்னுயிர்கொள்ளும்பொய்யலமெய்யென்றுரைசெய்ய
தன்னுயிர்காக்குநஞ்சம்விரும்பித்தளர்கஞ்ச
னென்னுயிர்நிற்குமிவளுயிர்போனாலெனநாடா
மின்னுயிர்கொள்வானுன்னியெழுந்தான்வினைவோடும். (௪௭)

அத்துணைகஞ்சன்றானமர்வலைணர்மருள்கூறி
மைத்துனனேதுன்மைந்தர்களன்றேவதைசெய்வா
முத்துறழ்மூரலாவமுடித்தென்முகிலோதித்
தத்தையளிக்கும்பாலனைநின்கைத்தருகின்றேன். (௪௮)

வஞ்சியையாவிவெளவலையென்றான்மன்றாடா
வஞ்சலைநன்றென்றம்முறைசெயவானவரோடுங்
கஞ்சனுமீளத்தேனொடாத்திக்கடிதேகி
மஞ்சிவரிஞ்சித்தன்பெருமூதூர்வந்துற்றான். (௪௯)

ஏறிருகால்சேர்தேரினிழிந்திட்டிவாமக்கட்
பேறிருகாலாயிடுகாறும்பிரியாமல
வேறிருகாலிங்கவர்தம்மைவிலங்கிட்டான்
சீறிருகால்சோதியவிலங்கிறகிரிகஞ்சன். (௫௦)

கார்மதமுண்டார்மனவுமடங்குங்கரிபோலுங்
கூரிசைதோன்றுந்துணையுமடங்குருவுயிர்போலுரு
சார்புயர்கன்னன்றம்மகவாகத்தருகாறுஞ்
சேர்புகழோரிருவோருமிருந்தார்சிறைதன்னில். (௫௧)

அவ்வழிநீடுந்தேவகிகேள்வனவனினுரு
செவ்வழியெல்லாங்கஞ்சனகையிற்செலவுய்த்தான்
வெவ்வழிநின்றான்கொன்றனனெல்லாமவிளிவுற்று
ரிவ்வழிதானோர்மூவிருமைந்தரிதன்பின்னர், (௫௨)

கருவினிலேழாமதுதனைமாயன்கடிமாயை
குருமலிநந்தகோபனதில்லங்குறுகுற்ற
வுருவுடைரோகிணியுந்தியிலுய்த்ததிவ்வுலகெல்லா
மருவுகருப்பம்வீழ்ந்ததுதேவகிவயினென்ன. (௫௩)

வெந்திறன்மாயாதேவியம்மாயன்விதிநிற்பாண்
மூந்துகருப்பம்வேறயல்வைத்தபின்முகில்வண்ணன்
செந்துவர்வாயாடேவகியுந்தித்திருவாலம்
பைந்தளிருற்றான்பண்டுதுயின்றபழக்கத்தால். (௫௪)

மாதமொர்பத்துமுற்றியபிற்றைவசுதேவன்
பேதைவயிற்றின்வந்துபிறந்தான்பிறழ்செங்கைப்
போதொருநாலுநேமியும்வாளும்பொருதண்டுஞ்
சீதநிலாவெண்சங்கமுமாகித்திகழ்கண்ணன். (௪௫)

சூரியகோடிநிலாவுகிரீடச்சுடர்வீச
வேரிகுலாவும்பூவனமாலைமிளிர்தொங்கற்
பாரியதோளிற்பேரொளின்மல்கப்படியுண்ணுஞ்
சீரியவண்ணக்கண்ணனன்மேனிசிறந்தன்றே. (௪௬)

தந்தவர்துன்புமன்பர்பிறப்புந்தலைசாய
வந்தருள்கண்ணன்தண்குடிகொள்ளவசுதேவன்
பைந்தொடிநங்கைதேவகியோடும்படர்நீங்கி
யிந்திரைகேள்வன்பேரிணையடியியம்புற்றான். (௪௭)

நீயுலகானாயுலகுடையானுநீயேயா
லேயுநிமித்தந்துணைமுதலாகுமிறையோனே
மேயமகத்தோட்டப்பிரதானம்விராட்டன்றி
யாயசுராட்டுமச்சமிராட்டுமானானே. (௪௮)

பூப்புனறீகால்வானிவைநல்கும்புவனங்கள்
கோப்பவனுந்தீர்நிலைநிறுத்துங்குலையாமற
காப்பவனீயானின்கணிவற்றின்கண்ணாரும்
யாப்பவைதங்கட்குன்றாமையல்லதையார்பாலே. (௪௯)

வெங்கொலைவாளுந்தண்டமும்வில்லும்வெண்சங்கும்
தங்கியவங்கைச்சீயநிகர்க்குந்தனிவீரா
வுங்கெவர்காண்பார்வையமளந்துண்டியாவண்ண
மிங்கிவளுந்திப்புக்கமைவுறறவிறும்பூதே. (௫௰)

நாந்தகையில்லாமுக்கண்முகுந்தாஞானநீ
யோநதலைவேலைஞாலமும்வானுமெல்லாமுந
தாந்தனிதோற்றுந்தந்தையும்யாயுங்காணாய்நீ
யாந்தரவந்தோனென்னவுநின்றாலெண்சொல்கேம். (௫௧)

ஐந்தமரேதிப்புங்கவநீயிங்காக்கென்றா
னந்தமர்செங்கைநாதனுமெல்லெனநகையாடி
வந்தனைகூறுநதந்தையுமயாயுமகிழ்வெய்த
முந்தையின்ஞாலம்வாய்வழிதோன்றமொழிகுற்றான். (௫௨)

வம்மினிராயுமையனுநீவிர்மருடீர்மி
னும்மைவருத்துங்கஞ்சனுயிப்பாலுண்பான்யா
மிம்முறைவந்தேமெம்பெருமாயையையீன்றாளால்
வெம்முலைமைத்தண்கோதையசோதைவிளக்கன்னாள். (௫௩)

கொய்யுமுறித்தண்கோமளநந்தகோபன்றேய்
தையலளித்தாள்பாயலிலென்னைத்தலாயெல்லா
முய்யவிருத்தமாயையையீன்றாளுயர்சேக்கை
வையம்வழுத்துஞ்சீர்வசுதேவாவையென்றான். (௫௪)

அக்கணமப்பனுமப்படிசெய்தனனுய்பாங்கர்
வைக்குமம்மாயைகிடந்தழலுற்றனள்மதுமன்றன்
மெய்க்குலமாதராளுங்குறிகாட்டும்விருப்பாள்போ
லிக்குரல்கஞ்சன்விளையவனுற்றனனிகன்மிக்கான். (ருரு)

உற்றவணங்குடறாக்கியெடுத்தவனுயர்பாறை
யெற்றினனன்பிலன்றானமுமெண்ணிலனிதுபோழ்தில்
வெற்றிகொண்மாயைகரங்களொரொட்டினுமினிர்தானை
பற்றிமுனிந்தவனங்கையிறுத்திதுபகாகின்றாள். (ருசு)

துன்மதிமூடனின்முன்வருகஞ்சாதுனையாதே
நின்மதிநின்கூற்றுற்றதுவேறோர்நிலையின்க
ணன்மதியில்லாய்நாடுதியென்றானகைமாலைப்
பொன்மதியானனவல்லியொல்லைபுகுந்தற்றாள். (ருஎ)

ஆண்டவள்பூசையளப்பிலகொண்டருளமடியார்கள்
வேண்டியநல்வரநல்கியிருந்தனள்விழைவோடு
மண்டகைகஞ்சனுமம்மொழிகேட்டுளமயர்வாகிப்
பூண்டபகைப்பொடுமுற்றனன்மற்றிதுபுரிகின்றான். (ருஅ)

ஞாலக்கிரமச்சிந்தையில்கஞ்சன்சினமூளா
வாலக்கிரகப்பூதனைமுன்னுவளர்தானைக்
கோலக்கடியைத்தன்பகையாருயிர்கொள்வானுய்ப்
பாலக்குழுவைக்கொல்லுமினென்றான்பரிவோடும். (ருகூ)

என்றிசைபித்தக்கஞ்சனிசைக்குமிசைகேளா
வன்றவணப்பேயீட்டமிழைத்துமஃதென்னாச்
சென்றுசினக்கும்பேய்களையெல்லாஞ்சிறுபோதிற்
கொன்றனனந்தக்கோபகுலத்திற்கோபாலன். (சுo)

ஆனபினானிரைதன்னுள்வளர்நந்தனரடன்மேவு
தானிகாவெள்ளையுமாயனுமைந்தர்கடாம்பல்லோ
ருனமில்சூழலொடேதுபுவேய்ங்குழலுயராவின்
கானமர்கற்றினமேயத்தனர்தாஞ்சிலகாலங்கள். (சுக)

கண்டவரின்புறராமனும்வண்டறைகாயாவின்
றண்டுணர்வண்ணனுமுள்ளநிரம்புசருக்கோடும்
பண்டையதங்கள்பழக்கமிகுத்தெழுபண்பாலே
யண்டர்குழாத்தொடவாணிரைகாத்தனரவர்சின்னாள். (சுஉ)

இந்நிலைவெஃகியவாடலிழைத்தவரிருவோரு
மன்னுயர்கோகுலம்வைகினர்மாதுலன்மற்றந்நா
ளன்னவர்தம்மையுடன்கொணர்வுற்றிவணடைவாய்நீ
யென்னவுரைத்தக்கூரனையேவினனெண்ணாதான். (சுங)

சேகுலவுள்ளக்கஞ்சன்விடுப்பத்திகழ்தெய்வக்
கோகுலமேலக்கூரனுமேற்புகுழலூதி
யாகுலநீக்காவானிரைகாக்குமவர்தம்மை
மீகுலவும்பர்வியப்பவழைத்துடன்மீண்டேற்றான். (சுச)

கடமலிமத்தக்கரியுறழ்கஞ்சன்கற்பாலே
வடமதுரைக்கண்வைத்தவர்தம்மைவநதன்றே
னுடனவனுற்றுக்கொண்டனைசெய்கையுரைசெய்தே
தடமணிமார்பக்கூரனடைந்தானறனதில்லின. (சுரு)

மற்றையவைக்கழிச்சியதன்பின்மதில்வெற்பு
முற்றநிடங்ருங்கொண்டலுறங்குமுயர்மாடப்
பொறறெருவெங்கும்புகழ்மதுரைக்கட்பொலிவெல்லாஞ்
சுற்றுபுநோக்கினர்கண்ணனுநீலத்துகிலோனும். (சுசு)

கோலநிலாவொருகுண்டலன்மாலிவர்கோபாலர்
பாலர்குழாத்தொடுபட்டணமாண்பதுபார்க்கின்றார்
மேலவர்பேரொளியல்லதுகாணகிலாவிரையோதி
வாலநிலாவுறழ்வாணுதன்[illegible]விழிமடநல்லார். (சுஎ)

தந்தையர்தங்களைமைந்தினிருடினர்தனுமுன்னம்
வெநத்துமேவியதன்றிபிரண்டுவிளங்காகம்
வந்ததெவ்வாறெனமாமதுராபுரிமறுகெல்லாஞ்
சிந்தையினமாலொடுபின்றொடாபுற்றனர்திருவன்றோ. (சுஅ)

காதலினோடணைகன்றெறிகைத்துணைகாணுமுன்
னேதமில்செங்கையிலங்கியகன்றையெறிநதிட்டார்
தீதுறுபேய்த்தனமான்மிசைவுற்றிடுசெயனோடா
மாதர்கடாமிசைவுற்றனபேய்த்தனமயன்மிக்கார். (சுகூ)

இடையர்தமிற்பாலாடைகவர்ந்தானிவனென்றே
வடைவுறுதம்பாலாடையளித்தாரணியாழிக்
குடையவனென்பாரங்குலியாழியொருங்கீநதார்
தொடையவிழ்கூநதற்றோகையர்மோகமொர்துணையின்றால். (எ0)

வேறு.

மைபுருவத்திருமாயனமடவியனைத்தானேக்கிவயங்குமுன்னோன்
மெய்யுருவமவர்க்குதவிவிருப்பினொடும்படர்காலைவிலலொன்றுங்க
ணுய்யுமொருநிலைச்சேமத்துறைவநகண்டோடியருளுநதிபோல்வார்
வெய்யவராயவண்காவல்புரியுமவர்தமைவெருட்டிவிரைந்தெடுத்தார். (எக)

எடுத்தசிலைசுனைநாரியேற்றவளைத்திடமுறிநததிரண்டாயோதை
யடுத்ததகிலாண்டமெல்லாமதுவினவிப்பலரடைநதாராடன்மிக்கோர்
தொடுத்ததனுத்துணியிரண்டாலவர்கடனுத்துணிப்படுத்திச்சொரியுந்தான
மடுத்துலவிவாயில்பயில்வயக்குவலயாபீடமருப்பைப்பேர்த்தார். (எஉ)

உரங்கொண்மதகயமருப்பைத்திருப்புயமேற்கொண்டவர்தாமொல்லைக்கஞ்ச
னரங்கமதிற்புகுந்தனர்களவணிருக்குமல்லர்தமிலதிகரான
வரங்குலவுசாணூரமல்லனையுமுட்டிகமல்லனையுமுன்னு
விரங்குதிறற்படைமல்லரொல்லையில்லாருயிர்கவர்ந்தாரிருவர்தாமும். (எங)

விஞ்சுதிறலிருவர்களுமற்றதன்பினவையினநிவிளங்குமம்பொன்
மஞ்சமிசையிருந்தனர்களைதிரிருக்குமாதுலனைமதியா[illegible]ங்கட்
கஞ்சனதுகளிதெரிந்துவெகுண்டெழுந்துகண்ணனவன்கால்கள்பற்றி
யெஞ்சும்வகையெடுத்துயரச்சுற்றிநிலமிசையடித்தானெவருமஞ்ச. (எச)

அடித்தலுந்தன்னுடல்சிதறிக்கஞ்சனுந்தென்றிசையடைந்தானவனபின்னோன்
முடித்தசற்பினவற்கிளையோனொண்மறையுமுன்னவனுமுசலிவானில
வெடித்தவுருமெனவிழுமோர்குற்றதனான்முற்றுவித்தான்வெஞ்சங்கங்கைப்
பிடித்தவன்பின்சிறைவிடுவித்தருள்புரிந்தான்றனைப்பயந்தபெரியோர்தம்மை. எரு

பின்புமதுராபுரியிற்கஞ்சனாலலைப்புண்டபெருஞ்சுற்றத்தா
ரன்பிலனாங்கஞ்சனுக்கஞ்சிப்புரியைவிட்டிதுகேட்டணைந்தோர்க்கெல்லா
மின்பமொழிபலமொழிந்தசலையளிசெய்தானிரைகள்யாவுங்காக்க
மின்பிறங்கும்புயலகடுகிழிக்குங்கோவர்த்தனமேவிடுங்கையானே. (எசு)

இக்கிரமத்தியல்புரியுங்கஞ்சனிலைகுலைந்ததற்பினிருந்தநாட்டை
யுக்கிரசேனனுக்குதவிமாறனைக்காணியவனைந்தவுமவர்தம்முன்
வக்கிரமினாரதனைமுகந்தெரிந்துமாதுலனைவதைத்தசெய்கை
யக்கிரமமென்குநர்மற்றனையபழிகழுவும்வழியறைநீயென்றான். (எஎ)

நண்பினொடுநாரினொடுநாரதன்கேட்டதற்குவிடைநவிலுகின்றா
னொண்பரமமுதலாகியொளியாகியானந்தவுருவமாகிப்
பண்புசெயல்பேருருற்பவமிறுதிபிணிகெடுபயிலாதாழிக்
கண்படுமாதவனினக்கோர்நல்வினையுந்தீவினையுங்கலப்பதுண்டோ. (எஅ)

எனினுமிஃதுயிர்களெல்லாமிழைப்பவிழைத்திடல்வேண்டிராமசேதுத்
தனிலிலகுகடங்கந்தமாதனத்திற்சிவலிங்கந்தாபித்தாட்டற்
கினியபுனலிராகவன்வேட்டிராமேசன்றனக்கயற்பாரிடந்துவில்லி
னுனியதனாற்பாதாளகங்கைதனைவரவழைத்தானன்மைமிக்கான். (எகூ)

உன்றனக்குமுன்னையதாமவதாரத்திராவணனையுயிர்கொள்பாவ
மன்றகலக்கவுசலைசேயழைத்தநெடுங்கோடிதனிலாடினீயு
மின்றொழியும்பழியிஃதென்றியம்பினன்மால்விடைமுனிவர்க்கீந்தபோதே
சென்றனனச்சேதுவினின்மாதுலனைக்கொன்றபவந்தீர்க்கமாற்றால். (அ0)

கோடியிடத்தினிதியற்றிச்சங்கற்பங்கவிகைபலகோடிநல்கி
யாடியடன்மாமனுயிரழித்தவினைக்கணாயேறியதற்குப்பின்னர்
நாடியசீருடைராமநாதனிருபதந்தொழுதுநந்தகோபன்
றேடியநற்றிருவனையான்வடமதுரையிடம்புகுந்தனன்சிறப்பினோடும். (அக)

வேறு.

மெய்த்தவத்தினீர்காளிதுநவின்றேன்வெற்றியிற்கிளர்மாமனையட்டவா
றித்தகைத்துயர்கோடியெனச்சொனீரிச்சைவைத்திஃதேசவர்நவிறுவா
ரத்தவர்க்கிலைவேதியராக்கொலீதற்பினுற்றிதிலாடியமுத்தர்பான்
முத்தொழிற்குரியோருமுவப்பர்தாமுச்சகத்தினும்வேறிலையொப்பதே. (அஉ)

கோடிதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் கசுஅ.

# சாத்தியாமிர்ததீர்த்தச்சருக்கம்.

---

ஒளிவளர்சூதனுவப்பினின்மீளவுமுரைசெய்வான்
றெளிவளர்மாதவிர்கேண்மினிர்கோசலைசேய்நல்குந்
தளிவளர்கோடிதடம்படிவுற்றிடுதக்கோர்சென்
றளிவளர்சாத்தியவாரமுதத்தடமதுதோய்வார். (க)

ஏத்தியநன்னீரிங்கிதின்மூழ்கினரிடர்வஞ்ச
நீத்தியல்கூருநலறம்யாவுநிலைசெய்யு
மேதத்தியமாக்கும்புத்தியுமன்றோர்விழைவெல்லாஞ்
சாத்தியமாக்குஞ்சாத்தியதீர்த்தத்தடமம்மா. (உ)

ஆர்கெழுசாத்தியவாவியின்மூழ்கிமறமுளரோர்
சேர்கதிவேள்விகள்செய்தவர்செய்தவர்சேர்கில்லார்
போர்கெழுமைம்புலனோடுபுறந்தருபுலமிக்கோர்
யார்கதியாயினுமிப்புனலாழ்கதியிணையாகா. (ங)

தானிகர்சாத்தியவாவியினீள்புனறனைமேல்யார்
மேனியிலுற்றதுமற்றதுபற்றியவினைதீரு
மானதடத்தினிலகமருடத்துடனுற்றோர்
மானிலைபுக்குயர்மேதருமாண்புடன்வதிவாரே. (ச)

முற்பருவத்திடைதீவினைமுற்றினர்மூப்பெய்தும்
பிற்பருவத்ததுநீக்கநினைந்ததுபிழையோரா
யற்புறுசாத்தியவாவியின்மூழ்கிடினருணன்சூழ்
புற்பனிபோல்வினைநீங்கிடுமையுறல்பொருளன்றால். (ரு)

வன்பவநீக்குவர்சாத்தியநீரின்மகிழ்ந்தாழ்வா
ரொன்பதில்லைகிடுமெத்துணையத்துணையாண்டெல்லை
மின்பயில்பங்கிறைமெய்ப்பதமேவுவர்வினைசாடிப்
புன்படர்கங்குறுரந்தெழுசெங்கதிர்போல்வாரால். (சு)

வம்பவிழ்பூந்தொடைவேந்துபுரூரவாவென்பான்
றம்புருசாபமகற்றியவிப்புனறேயந்தந்நா
ளும்பரின்மேவுமுருப்பசிநீக்கமொழிந்துய்ந்தா
னம்புவிமேலிதின்மேதகுசால்புடையறலுண்டோ. (எ)

ஈங்கிதுகூறியசூதனைமாதவரெல்லோரு
மோங்கியசூர்ப்பெணுருப்பசிமணமகனுலகாள்வோ
னுங்குயர்தம்புருசாபமணைந்ததெனவையாவும்
யாங்களுளங்கொளுமாறருள்செய்குதியென்றார்கள். (அ)

அன்றோர்புரூரவாவெனுமன்னவனமரேசன்
வன்றிறலாண்மையுமந்திரிவாழ்வுமரீஇயுள்ளான்
வென்றிகொள்வேள்வியுமெண்ணிலவீகையும்வினைமுற்றீட்
பொன்றிகழ்பூமியரோத்தமண்ணுடுபுரந்துற்றான். (கூ)

செருப்பயின்மொய்ம்பிணையே துணையாவெரிதிரையாடைப்
பொருப்புறுபூண்முலைமண்மகடோளிணைபுணர்காலை
யுருப்பசிமித்திராவருணன்புகலுயர்சாப்
நெருப்பில்வெதும்பினள்சேணிலநீத்தனணிலனுற்றாள். (க0)

வேறு.

ஊண்டகுமமுதத்தீஞ்சொலுருப்பசியிருப்பின்மேவி
மாண்டகுபுரூரவாவின்மாநகர்மருங்கோர்காவிற்
காண்டகுவேழவில்லிகாகளங்கறங்குமாபோற்
பாண்டகுவீணையேற்றிப்பாடினாள்பவளவாயால். (கக)

மாடகமுறுக்கியாழின்மாண்பிணியிறுக்கிப்பத்தர்த்
தாடகச்செவ்விநாற்றித்தந்திரித்தளர்வுநீக்கிப்
பாடகப்பதுமமென்றாட்பாசிழைபாடலுற்றாள்
கூடகம்புக்கவாவிக்குழுவெலாங்குழையவுள்ளம். (கஉ)

மண்டியபுள்ளுமாவுமருங்குறீஇமயங்கிச்சோரத்
தண்டளிர்ப்பொதுளப்பட்டதருக்குலநயந்துமாலைப்
பண்டருவீணைவாங்கிப்பாடுவாள்பண்டுசேணி
லீண்டவாரமுதைமீளவுமீழ்ந்திடுவாளையொத்தாள். (கங)

வெவ்விசையங்கூர்பாலுமேனியுந்தளிரமெல்லென்
றிவ்விசையங்கூர்தீஞ்சொலேந்திழைபாடலோர்ந்த
தெவ்விசைநாடுகொண்டசேனைகாவலர்மாற்றம்போ
லவ்விசைபுரூரவாவினஞ்செவியுற்றதங்கண். (கச)

நல்வழியான்பாற்பெய்தீநறுமதுத்தாரைபோலச்
செல்வமார்களிப்பினீடுசெவித்துணைபுக்கபாடன்
மல்வளர்புயப்புரூரவாவெனுமன்னன்கேட்டச்
சொல்வழிமடவார்சூழத்தாரமேறகொண்டுபோந்தான. (கரு)

போனபின்புரூரவாவப்பொருசிலைப்புரூரத்தாளைக்
கானுறுகாவில்வாழுங்களிமயிறபெடையிறகாணூஉ
வானசீர்த்தாரமாநீயாகிலாதாரமெய்தி
யானுயிர்பிழைப்பனங்காயென்றுபின்னிரந்துநின்றான். (கசு)

அன்னவளதனைக்கேளாவாவல்கொண்டுழங்கித்தானு
மன்னவர்மவுலியன்றாய்வழங்கியமாற்றநன்றா
லென்னுளங்கேதநீரவெனக்கொர்சங்கேதஞ்சொன்னு
னுன்னுடைமனைவியாவனுண்மையீதெனவுரைத்தாள். (கஎ)

தரணிகாவலனுநன்றேதையலாய்சாறுகென்றான்
புரணவாட்கண்ணிசொல்வாள்புதல்வராந்தகரிரண்டு
மரணமாயளிப்பாய்மிச்சிலளித்திடாயன்றியென்றுந
திரணெடுங்குறங்கிலாடைதீர்நதியான்றெரியநில்லாய். (கஅ)

சொல்லுமிம்மூன்றுஞ்செய்தாற்றுப்புத்துப்பாக்கித்தோன்றா
லில்லுனக்காவலென்றாளிறைவனுமினிதேயெனா
வல்லுறழ்நறுமென்கூந்தலிதுவராம்பற்செவ்வாய்
வல்லுறழ்முலையினாளைமனைவயிற்கொண்டுசென்றான். (ககூ)

கிளர்மனைநீங்கிமன்னன்கிஞ்சுகவிதழியோடு
மளகையுற்றெறிநீர்வாணியதன்கரையன்னமாடுந்
தளமலிமலர்நீர்வாவிச்சயித்திரரதமென்றோதும்
வளமலிவனத்துட்புக்கான்மாரன்மேல்வயிரமிக்கான். (௨௦)

அடிபயில்சிலம்புவம்பிலணிந்தணிர்வம்பையநதோ
வொடிவுறுமருங்குலென்பதுணர்ந்தனன்போலநீக்கிக்
கடிகமழ்கொங்கைபுல்லிக்கலந்தவளோடுமுற்றான
முடிமிசையொன்றுகொண்டமூவிருபஃதாண்டங்கண். (௨௧)

ஒக்கலுமும்பர்நாடுமுருப்பசிமறந்துவிண்ணோர்
மக்களிற்சிறியரென்பாண்மன்புயமணித்தூண்செய்ந
மிக்கசீர்ப்பாவையாகிவிலங்கன்மேன்மயிலாய்வேநதன்
றக்கதார்மார்பினுளுந்தானுடன்றழுவியுற்றாள். (௨௨)

வண்ணவேற்புரூரவாவாமன்னனோடிணங்கிமண்மே
னண்ணுமிந்நாளின்முன்னான்முகன்றநதைநல்கு
முண்ணமுதுடையதேவருருருப்பசியென்றோதும்
பெண்ணமுததனைவெஃகிப்பெரும்பசியுழநததன்றே. (௨௩)

இந்திரனூரர்செய்வானியல்விசுவாவசுப்போர்க்
கந்தருவன்றனின்னோர்கண்டுயில்பாயலெய்திச்
செந்திருப்பசிதிர்காட்சித்திகழுருப்பசிமாடுற்ற
வுந்துதளிரண்டிலொன்றையொல்லைகொண்டும்பருற்றான். (௨௪)

உரங்கொடுபற்றியீர்ப்பவுதளெனுமதலைகூப்பிட்
டிரங்கியததனைக்கேளாவேந்திழையேம்பலித்தென்
வரம்பெறுமகற்கொண்டாரோவானிடைப்படர்வார்மற்றோர்
புரம்புகற்பாலேனிங்கென்பாலனைவிடுத்தற்கென்றாள். (௨௫)

வள்ளிழைமாற்றங்கேட்டமன்னவன்மங்கையெம்மை
நள்ளிருளாடல்செய்யினக்கணுக்காண்பளென்று
வுள்ளமேலமைநதான்மற்றையுதண்மகவினையுநதூக்கித்
துள்ளிடக்கொண்டுபோனார்சூழிசைத்தலைவர்விண்மேல். (௨௬)

கரவுசால்கள்வர்கொண்டார்கான்முளையிரண்டுமநதோ
வுரவுசாலரணமாவாரொருவருங்காணேனென்று
வரவுநேரல்குல்வல்லியரற்றலுமாற்றானண்ண
லிரவெனுமுடிக்கைபெற்றானென்னவாளேநதிநேர்நதான (௨௭)

பட்டிகர்போகல்போகல்பான்மைகூர்மக்கடம்மை
விட்டனிர்போமினென்றுமிடலொடுதொடரும்போழ்தி
லெட்டிசைவீணைவல்லோரோவலாலிருள்விண்டோடச்
சட்டெனவெழுந்ததாங்கோர்தயங்கொளிமின்னுத்தானே (௨௮)

சம்பைசூழ்விளக்கந்தன்னுட்டையலாடனதுகேள்வன்
பைம்பொனீளறுவைநீத்தபடிவினைத்தெரியப்பார்த்தா
ளும்பர்சேரிசைவல்லோருமுதளிரண்டும்பர்விட்டுத்
தம்பதியடைந்தார்சொன்னசபதமுந்தவிர்ந்ததன்றே. (௨௯)

அத்துணையகன்றுபோனாளாயிழையுவணிகாப்போன்
மைந்துணையோடுமீண்டுமணங்கமழ்மனைநாப்புண்
பைத்துணையல்குற்காணான்பருவரலுழந்துநீங்காப்
பித்துணைந்துய்க்கையின்றிப்பேயரினுழிதர்கிற்பான். (௩௰)

இருநிலந்தன்னிற்றீராவிடும்பைகொண்டலைவானோர்நாட்
குருநிலந்தன்னிலுற்றான்குளிர்மலரோடைதன்றன்
மருங்கிலவோதிநால்வர்வானவர்மகளிரோடு
முருநிலவெழில்கூர்தெய்வவுருப்பசியாடல்கண்டான். (௩௧)

பூவையைப்புணர்ந்துகன்றாற்புரூரவாயாவாபொன்னம்
பாவைநேர்பவளச்செவ்வாயப்பால்வளாயபசும்பொற்றொகாய
மேவியந்துறையாதென்னைவிட்டுநீபோனதென்றோ
தீவினையிழைத்தாயென்றுச்சிந்தைநொந்தழைத்தான்பல்கால். (௩௨)

காரிகைகேட்டுவீணைகழறலையொன்றுநின்பா
லேரியல்கருப்பமுற்றேனீரைந்துதிங்கட்பின்னாச்
சேரிவணறத்தின்சான்றசேயுனக்குளதாம்பின்ன
ரோரிரவணைவேனுன்னையுள்ளலைபோதியென்றாள். (௩௩)

அண்ணிறனகரம்புக்காளாயிழைதோழிமார்த
தண்ணலிவதனநோக்கித்தையலீர்சாந்தவேந்த
னெண்ணியவேட்டகாட்டுமெனவெறுப்பன்றனின்ப
நண்ணிவீற்றிருந்தான்யானுநணுபுகொண்டணைந்தேனென்றாள். (௩௪)

சேடியர்கேட்டெமக்குச்சேயிழாயவனொடுஞ்செம்ம
லோடினிதுறைவதென்றுறுபவமாகும்வேலை
நாடியவ்வரசன்மீண்டுநகரணைந்தணங்கனங்கை
வாடில்சீராயுவென்னுமகப்பயந்துவந்துகையீந்தாள். (௩௫)

அளித்தபின்மன்னனோர்மன்றிராவென்றுமேவிக்
களித்தனன்மகவோரைந்துகாட்டிடுங்கருப்பமுற்றுளா
விளித்தனள்வேந்தையென்மேல்விருப்பினுல்வீணையலமேலா
தெளித்தநல்வரங்களீவார்சென்றவர்ச்சேர்தியென்றாள். (௩௬)

கேட்டலுமிறைவன்வல்லைகின்னரர்தம்மின்மிக்கோர்
மாட்டணைந்திறைஞ்சியானோர்வரங்கொளவந்தேனும்பா
லீட்டுமாண்செல்வமிக்கேனெழிலுருப்பசியோடென்றுங்
கூட்டுறீஇயிருத்தல்வேட்டேன்கொடுத்தருள்செய்யுமென்றான். (௩௭)

அனையவரதனையீவாராரழற்றாலி*யொன்று
தனையவன்பாணிநல்கித்தார்கமழ்மார்பகேண்மோ
வினையதைமூன்றுகூறிட்டெச்சநீயிழைத்திட்டாயே
லனையகன்றொழிதல்செய்யாளுருப்பசியென்றுமென்றார். (௩௮)

வாங்கியதழலைமீண்டுவருமவன்வனத்திருப்ப
ணங்கொருநினைவுநேர்ந்தானற்புதமந்தோவந்தோ
யாங்கருத்திழந்தேம்வாளாவெமக்குருப்பசிவந்தெய்தா
ளோங்கழற்றாலிதன்னாலுறும்பயனென்றுமின்றால். (௩௯)

---

* தாலி—மட்பாத்திரம்.

சுடுங்கனலிதனைவீணேசுமப்பதென்னென்றியாரு
நடுக்குறுகாட்டில்வைத்துநரபதிநகரிற்போனான்
கடுங்கனற்றுலியன்னாள்கழுந்தணிதாலியாகிக்
கொடுங்குழையவள்சேர்நாம்கொடுத்திடுங்கொள்கைதேரான். (௪0)

காவலன்காதனீடிக்கண்படான்கங்குனுப்ப
ணேவிலாதென்றுநங்கையுருப்பசியுலகஞ்சேரத்
தாவில்சீர்வீணைவல்லோர்தருந்தழற்றுலிதன்னை
யாவரும்வெருவுங்காட்டிலிருத்தினேமென்றுநேடி. (௪௧)

அந்நிலையெழுந்துபோகிபடவியுளதனைக்காணான்
வன்னியுட்பொதியோர்போதிமற்றவணிற்பக்கண்டா
னின்னதாயினதாலந்தவெரியுநற்றுலியித்தை
நன்னகர்நாங்கொண்டேகிநலங்கெழுபலகையாக்கி. (௪௨)

வெங்கனலெழுப்பிச்செய்தும்வேள்வியென்றெண்ணிவேந்த
னங்குலியாறுநான்காலரணிசெய்தழலுண்டாக்கிப
பங்கொருமூன்றுபண்ணிப்பாய்தழலவற்றினெல்லாஞ்
சங்கையின்மகங்கடந்தானைசதுர்மறைவிதிவழாமல். (௪௩)

உயர்மகமிழைத்தபேற்றாலுருப்பசியோடுங்கூடி
யியல்புழியாழ்நர்வாழுமிடமெலாமினிதினேகிப்
புயல்வளர்கவிகைச்செங்கைப்புரூரவாப்புணர்ப்பினீடி
மயலகன்றின்பமெய்திவைகினனைவைநாளில். (௪௪)

வேறு.

சுந்தரவாய்மைத்தும்புருநாதா, சுந்தரவிண்ணோர்தாம்புண்டூழ
வந்தரமின்னாடல்பயினரு, ரிந்திரனெனபானின்பொங்கண்டான். (௪௫)

தொல்குலவானோர்சூழ்ந்திடவின்ப, நல்கிடுநட்டநாடோறும்மேவுமென்
மேல்குமருங்குலுருப்பசிகாதன், மல்குபுரூரவாவுமடைந்தான. (௪௬)

மாமைநலங்கூர்வானகமின்னார், தாமுறைவண்ணநடந்தாநடிந்தசா
ராமளவின்கணடைந்தவழக்கார், காமருருப்பசிகண்ணுள்புரிந்தாள். (௪௭)

எள்ளலிலாடலிழைத்திடுமாண்பா, லுள்ளமதர்ப்பிலுருப்பசியென்பாண்
மெள்ளநகைத்தாள்வேந்தனைநோக்கா, வளளல்புரூரவாவுநகைத்தான். (௪௮)

பாங்குறுபல்லோர்பண்ணவர்நாப்ப, ணீங்கிவரோதுமின்றிநகைத்தார்
நீங்குகவென்னாநீடியசாபந, தாங்கலினுசான்றும்புருவிட்டான். (௪௯)

மாசில்புரூரவாமகவானை, யாசிலடைக்கலமாவடைகுற்றே
னீசிறிதாளினைந்திடுகென்னா, வேசறவோடிரந்தனனங்கண். (௫0)

கட்டறுகாதல்கருத்துறலாலே, மட்டின்மகங்கள்வருந்திவளர்த்தே
னொட்டிமருங்குலுருப்பசிதன்னை, விட்டிடுமாறெனவிண்ணவர்கோவே. (௫௧)

இத்துயர்தீரவிரங்கெனவுள்ள, மொத்துயர்கொங்கையுருப்பசிதன்மேல்
வைத்தபுரூரவாவினைநாடா, வித்தகவிண்ணோர்வேந்தனிசைப்பான். (௫௨)

சாபமகற்றுந்தன்மையுளாப்பே, நீபயமெய்தனிலங்கொள்புரூர
வாபயில்கோசலமன்னர்குலப்பொற், றீபமிழைக்குஞ்சேதுவதன்பால். (௫௩)

ஆழியசாத்தியாமிர்தமென்னுஞ், சூழியதண்டுறைசூழ்ந்திடவீழ
மேழிசையாழ்நரியக்கர்கள்சித்தர், வாழியல்வானோர்மாதவரெல்லாம். (ருச)

புத்திவழங்கும்புன்பவநீக்குஞ், சித்திகளியுநதீர்த்தசாப
முத்தியுநல்குமொழிந்தவையெல்லாஞ், சத்தியமன்றுசாத்தியநீரோ. (ருரு)

ஞானநலங்கூர்நாடரும்வீடு, தானிதிலுண்டாஞ்சாதகனாதன்றன்
மானிலமன்றுமறறநற்றேற்பே, ஞானதசாத்தியாமிர்தமென்றே. (ருசு)

அம்புவியேத்தும்புனரேய்ந்தாற், றம்புருசாபந்தார்ப்பமொள்வா
யும்பருமெய்தமுருப்பசிபோகம், வம்பவிழ்தார்புனைமன்னவவென்றான். (ருஎ)

தாழ்ந்தமனோசன்றன்னைவிருப்பால், வாழ்ந்துபுரூரவாவுடன்வந்தே
யாழ்ந்துயர்சாத்தியாமிர்தநன்னீர், வீழ்ந்திடுசாபமேவிலகடைந்தான். (ருஅ)

ஊறியவன்பினுருபபசியோடு, மேறிவிமானமெய்தபுவிண்மேல்
பேறுறுதேவாபெரும்பதமுற்றான், மாறில்புரூரவாவெனுமன்னன். (ருகூ)

சாற்றியபீடார்சாத்தியநன்னீர், போற்றினாதீபபாபுன்மைகளெல்லாந்
தேற்றியவேட்கைசேர்குவாகாம, மாற்றுபுசோயந்தாமாண்மதியோரே. (சுo)

வேறு.

அப்பகல்கேட்டனர்சனகராதியோரற்புதசாத்தியவமிர்தமென்மைதா
ணுப்புவியாக்கியாவினன்வாயிருலொப்பறநோற்றுயர்சவுனகாதியீ
ரிப்பகல்கேட்டனிரொன்றுவாயிருலெச்சமில்வேட்கையிலீவீர்நீவிர்தாம்
கைப்பமிம்வீட்டியர்கதினமேயயாகறபவர்கேட்பவர்கசந்திருமே. (சுக)

சாத்தியாமிர்ததீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் கஎ0க.

---

# சருவதீர்த்தச்சருக்கம்.

---

இகலிலாதகுமுவுசாலிருடிநாதாமகிழவே
புகலுமாறபின்னருமபொருவில்சூதனேதுவா
னகலமாசுசாத்தியவமிர்தவாவியாடினோர்
சகமெலாமுமேத்திடுஞ்சருவதீர்த்தமாடுவார். (க)

தருமரூபமாகுநீள்சருவதீர்த்தமூழ்குவா
ருருவினீடுவினைகள்போமுதனிலாடலுறதிடுந
திருவினோடையஞ்சிடுந்தீமைதீர்வதின்றெனுக்
கருவினெல்லையனனநீர்காணுமெல்லைதானரோ. (உ)

மகமிழைக்குமாண்பினுன்மந்திரங்களெண்ணலா
லகலும்வேதமோதலாலரனைமாலையன்பினுற்
புகரில்பூசைபுரிதலாற்புசிப்பொழிக்குநோன்பினுற்
றகவினீடுபயனெலாஞ்சருவதீர்த்தநல்குமே. (ங)

சறுவதீர்த்தமென்றுபேர்தடமிதற்குவந்தவா
றுறுவர்யாரும்வினவினருரைசெய்மேன்மையுன்னியே
நிறுவும்வேதவாய்மைபானிகழ்வியாதனடிகள்சேர்
மறுவில்சூதமாதவன்மரபினுடியோதுவான். (௪)

பேயொடாடியன்பனம்பிருகுவும்பலாயினு
ளுய்வினீப்சுதரிசனப்பெயர்க்கொளந்தண
னேய்விலாதநியதியானுற்பவத்தில்விழியிலா
னேயுழந்துநாயினுனேலிழந்தமேனியான். (௫)

அந்தணந்தவந்தணனைதன்மையதனினுன்
மூந்துநீர்களொன்றினுமூழ்கவேகுமுரணிலான்
மைந்திலாதிருக்கவும்வசந்தனைக்கணிசொலாம்
பந்தமோடுமாறுதான்பரிவினுடவெஃகினுன். (௬)

கோலமல்குநீரொலாங்குதலையனீடுகாதலாற
காலவாசைவேலைசூழ்கந்தமாதனத்திலே
யாலநீழலண்ணலாரடிவழுத்துமர்ச்சனை
மூலவேதமுறையினுன்மூன்றுபோதுமுயலுவான். (௭)

பொழுதுமூன்றுமாடிநீர்புலனடக்கியன்பினுற்
கழுதுசுற்றவாடுவான்கழல்பணிந்துபாடுவா
னிழுதினேடுநறியவூணிழைத்தவர்க்குநல்குவான்
முழுதுமாகநீற்றினுன்முண்டமேவுபுண்டரன். (௮)

வேனில்வேலையைவகைவெய்யவங்கிநாப்பணுங்
கூனன்மேனிகுளிர்செயுங்கொண்டலம்புதண்ணிலும்
வானநாளில்வானிலுமருத்தருந்திவைகியே
யீனமின்றிநோற்றனனிருபிறப்பினனரோ. (௯)

கணிதவாண்டொராபஃதுதான்கண்டிமாலைமார்பனைப்
பணிசுமந்தபாரில்யார்பண்ணவல்லவொன்னவே
மணிதயங்குவிழியிலான்வளர்தவத்தின்வாடல்கண்
டணிகொடிங்கள்வேணியானருள்சுரக்கநாடினுன். (௧௦)

தெள்ளலைக்கொள்கங்கைநீர்சிதறுசீகரத்துடன
கள்ளிறைக்கவெங்கணுங்கடுக்கைமாலைகண்ணுத
னள்ளழற்கொழுந்துலாய்நக்கவேறுநகையெலாம்
வெள்ளிவெற்புநடவலபோல்விடையுகைத்துவிண்ணின்மேல். (௧௧)

வெற்பில்வல்லிமென்கைசேர்வெள்வளைத்தழும்புடன்
பொற்புயங்கொளங்கதப்புயங்கராசிபொலியவே
யெற்பிறங்குமேனிமேலெழுந்தசோதியெண்டிசைப்
பிற்பிறங்கொள்கங்குல்வேர்பிடுங்கிநின்றிலங்கவே. (௧௨)

பிடித்தசூலமொன்னலார்பேருடற்பிளந்துமுன்
குடித்தசோரிமீளவுங்கொப்பளிக்குமாறுபோல்
வடித்தசோதிவீசவேமழுவலங்கைமல்கவே
முடித்ததிங்கள்வெண்ணிலாமுளைக்கொழுந்துலாவவே. (௧௩)

உடையநங்கைகண்களோடொப்புநோக்குமாறுபோ
லடையவைத்தசெங்கைமானதுகுதித்திறங்கிடா
திடையுடுத்தவெம்புலியிருந்துவக்கணுங்கவே
புடைநெருங்குகூளியும்பூதமுந்தழைப்பவே. (கச)

கால்விரிந்தவெண்ணிலாக்கடிகொணீறுபூசிநூ
லால்விரிந்தமார்பமுநடங்குமாரமாலையு
நீல்விரிந்தகண்டமுநிலைவிரிந்தவாரணை
மால்விரிந்தநீழல்வாயறைந்தவாயுமழகுற. (கரு)

கண்ணனிட்டபார்வையுங்கருந்தலைச்சில்வேடுவ
ரண்ணலிட்டபார்வையுமன்பர்சூழ்ந்துபார்க்கவே
யெண்ணலுற்றவிருவருமிந்திராதிதேவரும்
பண்ணவக்குழாங்களும்பணிந்துபோற்றெடுப்பவே. (கசு)

வேறு.

விதிபுரியிவர்க்கரியமேனியலதொன்றை
முதலுணர்கிலேனெனமுகிழ்த்தகணிரண்டும்
புதரிதயமாமுளரிபோலமலர்வித்தே
சுதரிசனனென்றுணாசெய்துயனெதிர்நின்றான். (கஎ)

நிற்றலொடுநித்தனருளானெடியநோக்கம்
பெற்றவனவன்றெரிபுபேசமறயாண்டு
முற்றசரணங்கண்மிசையோடியடிவேரோ
டற்றமரம்வீழ்வதெனவன்பினொடுவீழ்ந்தான். (கஅ)

வீழ்ந்துவிழிமாமலர்மிலைச்சியுடலெல்லாம்
வாழ்ந்திடவெழுந்தருளும்வள்ளறனைவாஞ்ஞோ
தாழ்ந்திடவுயர்ந்தசிவசங்கரனைநெஞ்சாற்
சூழ்ந்துருகிமெய்ப்புகழ்துதித்திடுதலுற்றான். (ககூ)

மங்கையுமைபங்குறையபங்கவாவங்கூர்
கங்கையொடுதிங்கள்புனைதுங்கசைறங்குஞ்
செங்கையணிகங்கணபுயங்கசிரகங்கொ
ளங்கைவிதிகங்குலவலங்கலகளங்கா. (உ0)

அரகரவராகமிலரானவர்பராவும்
வரகரவரானவர்விராவரணவஞ்சப்
புரகரபுராதனகராவையடுபுள்ளூர்
சரகரசராசனதராதரபிரானே. (உக)

ஓலமிடுகோலமறைநாலுமுனிநால்வர்க்
காலநிழலேலுமருளாலுதவுசீலா
பாலனையவாலவிடைமேலபடர்நீலக்
காலனுயிர்காலவொருகாலிடறுகாலா. (உஉ)

நீளமரர்கோளிலுயிர்மீளநுகர்காளா
வேளதுடன்மாளவழன்மூளும்விழியாளா
வாளிலகுநாளமலர்நாளலர்செய்தாளா
வாளுநெறியாளர்தமையாளுமருளாளா. (உங)

அம்பரதிகம்பரவக்கம்புறம்விரும்பார்
வெம்பவபயம்பரிபரம்பரவிரும்புஞ்
செம்பொனணியம்பலசிலம்பொலிசிலம்ப
நம்புமவாதம்பநடனம்பயிலுநம்பா. (௨௪)

பாசமறவீசுபிரகாசமறைவாசி
யீசபவநாசவுணர்தேசில்புகழ்பேசு
நேசர்மிருநேசநிறைமாசிறுகள்வாசம்
பூசுமமரேசதவர்பூசையுரிசேசா. (௨௫)

கட்டரவுகட்டுமணிபட்டிகையமுட்டாண
மட்டலரில்விட்டொளிரும்வட்டமுகதொட்டே
யட்டுழுவைநெட்டுரிகளட்டவுருநட்டா
திட்டமுமதிட்டமுமில்சிட்டசிவபட்டா. (௨௬)

வெற்பவையின்முறபரவுவிற்சயிலவிற்போர்த்
தற்பாமசிறபடிவநறபொருவுபொற்பா
வறபகலுமிறபரசுமற்புடையசொற்பாக்
கற்பவாகணறபுலணினிற்புறுமகற்பா. (௨௭)

வையுநிலைபொய்யுடையமையலெனவுய்யு
மெய்யருளினையுமுளமெய்யருணர்மெய்யா
செய்யசூலகையிலணிசெய்யுமொளிர்செயயா
வையமகலையர்தொழுமையமிசையையா. (௨௮)

வேதவளர்கீதவித்யோதநெறிமீதா
ரோதுவகலாத்பரபோதகவிநோதா
பாதகசிராசபடைமோதுமிருபாதா
நாதமிருசோதிவளைகாதலனிநாதா. (௨௯)

அன்னையுமளித்தருள்செய்தக்தநுமெனக்கா
முன்னையலதோர்துணையுமுள்ளமிசைகொள்வே
னென்னையருள்கூதியெனவின்னபலவாகுஞ்
சொன்னிலவுமாலைகொடுத்தினிதணிந்தே. (௩௦)

இன்றுவிழிதந்தருளியெந்தையெதிர்நின்றாய்
பின்றைபிணிவேறுதெரிபெறறியிசைகில்லே
னென்றுமெனதம்பகமுனைய்திடுதியின்றேன்
மன்றவிழியனறையின்மறைத்திடுதிவள்ளால். (௩௧)

என்பனடிதாழுவனெழுந்துதுதிசெய்தே
முன்பணிவுசெய்ததைமறந்துமுறையாலே
பின்பணிவஞ்சசறுபிறப்பிருமைபெற்று
மன்பிறெடுநெஞ்சொருமையாகியறவோனே. (௩௨)

ஆதரவுகண்டமலனந்தணனைநோக்கிப்
போதுமினிவேண்டியபுகன்றிடுதிமேலோய்
நீதவமுயன்றமைநினைந்தமைநினைந்தே
யோதியிதில்வந்தனமுனக்கருளவென்றான். (௩௩)

வேறு.

வாண்மதிச்செஞ்சடைமுடியோன்வாய்மையுணர்ந்தவன்கமலத்
தாண்மதிக்குஞ்சுதரிசனன்றன்றனைமிசைவீழ்ந்தடிகேள்யா
னொண்மதிக்குநிகர்வெளுத்தசனையுடம்பானவிழுற்றேன்
சேண்மதிக்கும்புனலாடல்செயமாட்டேனெனச்சிவபெருமான். (௧௪)

நன்னீர்கண்முழுதாடுந்தகைமையுடையோனதுபயந்த
மந்நீர்மையருளென்றுமன்னவனுமங்கதுகேட்டுக்
கொன்னீர்வேற்காகுத்தன்றாம்பரனுல்வாம்பரனசீர்
மின்னீர்மைமுகிறவழும்வியன்கடமாதனத்தில். (௧௫)

புனன்முழுதும்வரவழைக்கேம்புராரியெனப்புகன்று
மனமகிழினினைதருளவந்தனவப்புனலெல்லா
மனையுறழ்தண்ணளியீசனந்தனைவப்பார்த்தருள
முனிவரனேயித்தீர்த்தமுடிதமுழுவிவையோர்த்தாம். (௧௬)

நீர்கள்பலசெறிதலாணிகழ்சருவதீர்த்தமெனும்
பேர்பெறுமானதனாமம்பெறுமனங்கால்விளித்தமையாற்
பார்பரவுபுனலின்பம்பரபோகமவையிரண்டு
மேர்பெருகுமிஃதொன்றேயினிதளிக்குமிருமிறப்போய். (௧௭)

கடும்பதகனைக்கழலாங்காமமுதலாமடைய
நெடும்புபலாம்பிறப்பிறப்பெனுமொன்றுநீங்காத
குரும்பமெனுமனைவையடாக்குனைகடலின்கரையேற
விடும்புணையாம்வேதாநந்தவித்தையன்றிமுதல்தருமம். (௧௮)

நிரையவழியடைக்குமிதனெறிமறையோர்க்குடைகென்றே
வரையனையன்மடப்பாலிமணவாளனருள்புரிந்தா
னுரைசெய்துனையதிலாடியுதறியெழுங்கதிர்போல
நரைதிரைபோயிளம்பருவநல்லுருவங்கொண்டெழுந்தான். (௧௯)

ஏறுடையானுடனனைந்தாரிதின்மூழ்குமவன்கிழவன்
வேறொருவனெழுந்தனனேவிளங்கொளிநீர்ப்பெருமையினான்
மாறுறுமூப்பினைக்கழுவிவந்தனனேயிவனென்று
வாறுலவுசடைப்பெருமானருள்பரசியதிசயித்தார். (௨௦)

சுதரிசன்றனவண்படைத்தசுடர்ப்படிவந்தனைக்காணுஉப்
பதராறுனன்முனிவருடன்பங்கயநற்றடமதனைத்
துதிபுரிந்தானிறைவனவண்டுமறையோன்றனைத்தெரிந்து
வதிகுதிநீயெஞ்ஞான்றும்வளங்கெழுநீரிதன்கரைமேல். (௨௧)

ஆடுநினைந்தமையிதனிலயற்றீர்த்தஞ்செலல்வேண்டாம்
வீடினைக்குமிறுதியினின்வேதியனேவிளைத்தினிதுன்
னேடுபடிந்திடுமவர்க்குமுதவிடுமென்றுரைத்தருளித்
தேடுமிருவருக்கரியசிவபெருமான்கரந்தகன்றனன். (௨௨)

வேறு.

ஆனதற்பினர்வேதியனப்புனலாடியுற்றயிராகமகற்றிவிண்
போனவக்கணமேவினன்முத்தியிற்போதநற்றவிர்யாமுழுமக்கிவண
மானதப்புனல்வாய்மைநவிற்றினமாசிலிக்கதையோதியவுத்தமர்
பானநற்செவியாலடைவுற்றவர்பாதகக்கடலேழவற்றுமே. (௨௩)

சருவதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௧௭௫௨.

# தனுக்கோடிச்சருக்கம்.

பயங்கொள்பவப்படையுடைக்கும்பவுராணிகோத்தமனும்பண்புசான்ற
நயங்கொள்புகழ்ச்சூதமுனிநன்முனிவருடன்மீண்டுநவிற்றல்செய்வான்
வயங்கொள்புலப்பகைதடிந்தீர்மானதீர்படிந்தோர்கள்வையங்காக்குஞ்
சயங்கொண்மனுக்கோடிநிகர்தசரதன்சேய்தனுக்கோடிதன்னிற்றோய்வார். (க)

பீடுகெழுமதிலிலங்கையரக்கர்தனுக்கோடிபலபிளவுகண்ட
நீடுதனுக்கோடியினைநினைந்தாலும்புகழ்ந்தாலுநேர்கண்டாலும்
வீடுபெறலெளிதாகும்வெநரகமெழுநான்கும்விழியிற்காணார்
கோடுமதிமுடியவன்றாள்குறித்துணருஞ்செய்யமதிக்குணத்தினீர்காள். (உ)

குழுமுதமமந்ததமம்ரவுரவமாரவுரவமேகும்பிபாக
மழிவுதருகாலசூத்திரமசிபத்திரவனமேயருந்தலாகாப்
புழுவுணவுபுகலரியவிருட்கூபஞ்சந்தஞ்சம்பொருமுட்கூராற்
பிழைபடுசன்மலிசூர்மிபேருக்கியெழும்வைதரணிபிராணரோதம். (ங)

ஆயவிதசனம்லாலாபக்கணமேயவீசியுடனடருஞ்சார
மேயவுணவச்சிரகண்டகங்காரவளறரக்கர்வெள்ளவுண்டி
ஆயதழல்சொரிசூலப்பிராந்தவிதோதனந்தநதசூகந்துய்த்தல்
சேயபரியாவருத்தந்திரோதானஞ்சூசிமுகஞ்செந்நீர்றுங்கல். (ச)

நச்சழலிற்சுழல்கொள்பரிபீடனமென்றிவைநரகநாலேழாறு
மச்சமிவற்றுண்டெனவுமடைவதிலர்புருந்திடருற்றழுந்துவாரோ
வெச்சவிடைக்கிரங்கலின்றியெழுங்கலசமுலைச்சனகியென்னுமின்சேர்
பச்சைமுகிலிடந்தயங்குநதனுக்கோடிபடிந்தவர்கள்பூமையீர்காள். (ரு)

மாதர்பொருண்மைந்தரிவர்தமைத்திருடும்வஞ்சகனைவலியகால
தூதர்பிணித்திருள்பெருகுதமத்திடுவரந்ததமந்துன்னிச்சோர்வா
னூதனுயிர்கொன்றுநிதிகொண்டுநுகர்நவையுடையானல்லுயிர்க்குத்
தீதிழைத்துமனைநிறைப்பான்விடவரவாரவுரவத்திற்சென்றுசேர்வான். (சு)

வன்றுயர்கூர்மாரவுரவத்தினிடையடைந்துமனைமாதினோடுந
தன்றனயர்பசித்திருப்பத்தானுகர்வான்றன்றசையைத்தானேதின்பா
னன்றியுயிருளபறவைவிலங்கிவற்றையருள்சிறிதின்றடுவோனாகு
நன்றியிலாவேடர்தமிலிழிந்தோனைநமன்றூதர்நடுங்கப்பற்றி. (எ)

குன்றுநிகர்புயமுரியப்பிணித்திறுகக்கொடுபோந்துகும்பிபாக
மென்றநரகினிற்றயிலமெரிமயமாமதனிடையிட்டெரிப்பர்பன்னா
ளன்றிமறைபந்தணரையன்னையத்தனிவரையவமானஞ்செய்வோன்
றுன்றுமிடமோரயுதயோசனையாங்கொடுங்காலசூத்திரத்தில். (அ)

மேலெறிக்கவிரவிசுடர்கீழெரியவெய்யதழல்விளங்குசுல்வத்*
தாலமைத்தநெடுங்களத்திருவிகுலைந்தழுங்கியுளமலறிச்சோர்வா
னலுமிறைநெறிமாற்றிநவைநெறியினடக்குமவனரிவீங்குங்
காலனெடுந்தூதுவராலடைவனசிபத்திரவெங்கடறுதன்னில். (கூ)

* சுல்வம்—தாமிரம்.

வென்றிபுனைமுடிமன்னருமிடிகுமவனுழையில்விளைஞரோனு
மொன்றுமபராதமுறுதலர்கடமைத்தண்டிப்போருயர்ந்தபூமி
தன்றுசுரர்தமைப்புடலம்வருத்திடுவோரிவரமன்றூதர்பற்றிப்
பன்றிமுகமெனுநரகிலாழ்த்திடுகன்னலெனப்படுத்துவாரே. (க0)

யாவதுமெம்பரனருளென்றிருக்குநருக்கிடர்புரியுமிழிஞரைந்த
கூவமதிற்கண்படைநீத்தன்னவராற்றுயர்க்கடலுட்குளிப்பன்பன்னாட்
டேவர்முதலவரைகையமகம்புரியாதுண்ணுமவன்சிறந்தவுண்டி
மேவசமயந்தியிறோர்க்கிடலின்றித்தானமிசையுமவெறியனின்றோர். (கக)

இரும்புறுவெனுநரகந்தனிற்புகுந்துநாமுறெடுங்கிருமியாகிச்
செருமிவளர்கிருமிகளுக்குணவாகித்தாமுமவைதினநோவா
ரருமறையோராடகத்தைப்பிறர்நிதியைவன்மையினாலபகரிப்போன்
றிருடுமவன்றிருடிக்குந்தியனைனச்செப்பிடுமித்தீயோரெல்லாம். (க௨)

காய்கனல்சேர்கருந்தாதுக்குழியநறுளெவ்விடமுங்கலந்துமொய்த்திட்
டகறிக்குஞ்சகந்தஞ்சநரகடைவர்தென்றிசைக்கோனேவலோரா
லாய்கலைதேரருண்முனிவீரனுகவொருவாடவனையணைந்திட்டாளும்
வேய்கொழுந்தோளிணைபுணர்தற்குரியரல்லாடனைப்புணரும்விதியிலானும். (க௩)

ஏழுலிருப்புமகன்மடந்தையத்துணையைமிருகுட்டுருள்ளளவும்பற்றித்
தழுவிவிடுருழுநதலைவர்சூன்மியின்பாற்சன்மலிமுட்டைக்கதுச்சேர்வான்
குழுவுமிரைப்பலவிதத்தான்வருந்திடுவான்வைதரணிகொண்டமிழ்த்து
மொழியுநெறிப்புக்கறத்தின்கரையுடைக்குமரசேனுமுறைழயரோனும். (க௪)

மானமிகந்தாசாரவரம்பொருவிவிடலிமிசழ்மதுமாநதிக்
கானவிலைங்கெனவிலங்குமறைநெறியின்மருண்டொழுலுங்கடியன்சேர்வ
னூறுதிமலங்கோளமுழுதிரள்ச்சேர்ந்த்ரமிவற்றெழுமினுருடு
யானவதிபயங்கரங்கூர்பெருநரகிலடுகூறதிறுணைதன்றல். (க௫)

காட்டுறையும்விலங்கினுயிர்கடிங்கனையான்றுரமிகவாசநகவர்ந்துநாளும்
வேட்டைமுயல்வெயவனைமேதியிறைவிநாதூசர்விசிகத்தேறறி
யீட்டிபிராணத்தகைகவாமிருநரகில்வீழ்ந்திடுவானெச்சநாவி
வாட்டுமவன்மறைமுறைவிட்டகருமியொலிபடுவன்வைசசததில். (க௬)

தொல்குலஞ்சேர்மனைவியைத்தனசுக்கிலநீர்நுங்குவிக்குமதுமிசனநீர்
மலகுநெடுங்குழிக்கிடந்துகாமவறலபருகியிடுமவணிகாதம்பா
லல்குபொருள்கவர்ந்துநகாழனுட்டியிடமருத்தியாவிக்கிரு
நல்குமவன்வச்சிரதக்கிட்டிரப்பேர்நரகடைந்துழைவன்பன்னாள். (க௭)

சொன்னவர்களனைவர்களுந்தனுக்கோடிபடிந்தனரேற்சொல்லியவந்
வெந்நரகமடைவதிலர்வேறுபலநிரயங்கள்விளம்பாநின்ற
வின்னமுனைவவையெவற்றுமிதின்மூழ்குமவர்மூழ்காரிவணிமேதத்
துன்னுபலம்படைத்திடுவாரொருவிசையித்தனுக்கோடியுதகந்தோய்வார். (க௮)

வேறு.

ஆவியுண்மையறிவுதலைப்படீ, மேவுநாலுவிதங்கெழுமுத்தியும்
பாவவள்ளிபடராபழங்களும், யாவுங்காய்படுமின்பமுண்டாகுமால். (க௯)

ஆடகத்துலையாயிரங்கோதனங், கூடநல்குங்கொடைப்பயன்றநதிடு
நீடுகீர்த்தியுஞ்செல்வமுநீங்கலா, மாடுமல்குமனத்திருணீங்கிடும். (உ0)

அஞ்சுதீமையிலொன்றிலயுசமாம், புஞ்சமைம்பதினாயிரம்போக்கிடும்
பஞ்சபாவந்தனக்கநுபாதக, மெஞ்சலில்லனயாவையுமெஞ்சுமால். (உக)

பரவுமாசைப்படுகடற்கப்புறம், விரவுமுள்ளம்விரிகடன்மேதினி
புரவுபூண்டபுயனுறழ்கார்முகக், குரவனீள்சிலைக்கோடியிலாடினால். (உஉ)

கொன்னெடுந்தனுக்கோடிநலம்புக, லன்னவாய்மையிலையமின்றையர்காள்
வன்னிவெந்தமழுவினைநாவிரு, லின்னமெய்ம்மையென்றேந்துவன்யானரோ. (உங)

யாங்கிளந்தவிருந்தனுக்கோடியி, னோங்குசிருபசாரமென்றோதுவான்
சாங்கரீயமரபிற்சனித்தவ, னங்கதனறியறக்கயலாகுவான். (உச)

மைத்தமாமருண்மாற்றிவளங்கெழு, புத்திநல்கிப்புரிநதிடுமாக்கமு
மெய்த்தஞானமும்வீடுமளித்திடு, மித்தகைத்தனுக்கோடியிருக்கவே.(உரு)

வேற்றுநீர்சிலவேண்டிப்படருத, லாற்றுநீர்மையராரினும்பேதைய
ரோற்றநன்றியொன்றில்லாரிவர்மருட், பேறறின்மான்மியம்பேசவொண்ணுதரோ.

பெருமீரிதன்பீடுபழிச்சுவா, ருருகிநோக்குநருள்ளத்தழுத்துவா
ரருகுசென்றுதொடுமவரன்பினாற், பருகுவார்முலைப்பாலபருகாரரோ. (உள)

நீரின்மேன்மைநிகழ்த்துழிநீடருள், வாரிசூதன்மறைமொழிமாதவர்
பேரிதற்குப்பெருநதனுக்கோடியாங், காரணம்புகலெனனக்கழறுவான். (உஅ)

கோனிராமன்குலவுதன்றாரமா, மானவன்றனதாவிமுருக்கிமுன்
பானுமைநதன்பறித்தமலியை, மேன்மைவீடணன்சென்னிமிலைச்சியே. (உகூ)

துறைகொணீர்மிசைதோன்றியபோதுபோற், சிறையினீங்கியசீதையுநதம்பியு
மறையுணாநதிடுமாருதிவானரர்க், கிறைவனாதியர்யாருமவளைப்பவே. (ங0)

சித்தர்சாரணர்சேணியிற்கந்தரு, வத்தர்தேவரரம்பையர்மாதவர்
மொய்த்துவாழ்த்திடமூவெயிலவாட்டிய, வந்தனென்னவில்லங்கையிலேகியே.

இலங்கைநீங்கினனிட்டவினனீங்கிடா, நலங்கொள்சார்தவழ்ஞாயிறுநதிங்களும்
வலங்கொள்வெற்பெனவண்கந்தமாதன விலங்கன்மேல்விளையாடொடுமேயினான்

ஆண்டிருந்துழிபண்ணலிராகவன், றீண்டமெய்யடையாளாச்சிலையினை
மாண்டதன்குணதோடும்வகுத்தநாள், பூணுவீடணனென்றுபுகலுவான். (ஙங)

ஈறிலாதிக்குரம்பிருந்தாலிஃ, தாறதாகவநிவாரடலுளோர்
வீறுசேதுவிடர்ப்படவில்லினாற், கீறலவேண்டுங்கிளர்மணிப்பூணினாய். (ஙச)

என்னைவெஃகியெனலுமிராகவன், வின்னுனிக்கொடுவென்றிக்கலுழனாற்
பன்னகப்பிணிமுன்றுணிபட்டபோ, லுன்னுசேதுவுடைந்திடக்கீறினான். (ஙரு)

ஊக்கமார்தனுக்கோடியுடைத்தலா, லாக்கினாரிதறகப்பெயராய்ந்துளார்
நீக்கிலாநெடுங்கீற்றிதுநேர்பட, நோக்கினார்பின்கருக்குழிநோக்கிலார். (ஙசு)

வெய்தெனச்சிலைவெற்பின்கடையினாற், செய்தகீற்றினைக்கண்டவர்சேருவார்
பொய்தவிர்ந்தபுலத்தினைமூழ்குவா, ரெய்துமாண்பயன்யானறியேனரோ. (ஙஎ)

நன்மதைக்கரைநற்றவம்போற்றுவான், றன்மனத்தெழுபாதகஞ்சாய்த்திடுங்
கன்மலைத்தெழுகங்கையின்மாண்டவன், புன்மலச்சிறைநீக்கிப்புனிதனும். (௩௮)

குருநிலத்திற்கொடைபுரிவான்செயும், பெருமறைப்பிரமக்கொலைநீங்கிடு
மருவுசோனபுவளமலியீகைமற, றுருவிறத்தலென்றேற்றியமுன்னையும். (௩௯)

கட்டுஞ்சேதுவிற்கார்முகக்கோடியி, லிட்டமோடுமிளமூழ்கிடக்கிட்டுமேற்
கிட்டும்யாவையுங்கேழகன்முத்திய, மொட்டுமையமிதனாலுயுண்மையே. (௪௦)

மாணிநீவினைவாட்டிடுமற்றிது, காணுமெல்லைநிற்கார்முகக்கோடியாற்
பூணுங்கீற்றிதபொன்னகர்மாலயன், பேணுமூர்க்குப்புகுமொழிநானரோ. (௪௧)

மூள்விருபபின்முயன்றிடுமாதவம், வேள்வியீகைவிளம்பிடுமாதிர
மாள்வினைச்செயறனைவிலக்கமா, நீள்பெரும்பயனீதுகாணுமால். (௪௨)

மோகமல்கியறம்பிறமுன்னியே, யாகம்வாட்டியென்றும்பயமூன்றுதி
நாகமாநதிநாப்பண்சென்றுடுமா, றேகல்வேண்டாவிருப்படியார்க்கரோ. (௪௩)

நானுலாந்தனுக்கோடிநராதிர், காணில்வேண்டிலர்காசியின்மாநல
மூணிலான்றினமூன்றுதிலாடியான், மாணுலாம்பொருளியான்வழியனும். (௪௪)

அச்சிலைப்பெருங்கோடியறலினை, நச்சியாடுநயமுடையார்பெற
வைச்சபேறுவளாவறுதக்கினை, யெச்சகோடிகளிதலிலாவரோ. (௪௫)

கோளிலாப்பதினையிரங்கோடிநீ, ராளுமண்மிசையுள்ளவையெலாந்
தாளுலாமலர்ச்சானகிதனமண, வாளன்வார்தனுக்கோடியினைவுமால். (௪௬)

தேவர்முப்பத்தரமவருர்தேவர்சூழ், மூவராயமுதல்வருநாரங்கவர்
தேவிமாருந்திணிசிலைக்கோடியுண், மேவிநாளும்விருப்பினிருப்பரால். (௪௭)

முத்திபெற்றமுனிவருமோதிபா, லத்தியுற்றமுதலுனர்தேவரும்
புத்திபெற்றதம்புண்ணியம்பெற்றனர், [illegible]சிலைக்கோடிவாய. ௪௮

மூட்டுநான்சிலைக்கோடியின்மூழ்கியே, யீட்டுவாயிலங்கள்வர்தமை
யூட்டுவான்வினையாவுமொழிந்தவன், வீடின்வீடு மனைமேவுவான். ௪௯

செருத்திறங்கொழுதிண்சிலைக்கோடிவா, பொருந்தன்னாயமுருமறையோர்முனு
வருத்தனைவன்யாண்டுமழிவுறு, திருதநம்பெரிதைநாட்டிமருபபனை. (௫௦)

சாகமூலபலமுண்டுதம்முயிர், போகநீர்ப்பவர்புண்ணியமூழ்குவாக்
காருமாடபவாடலவிறமகாடிநீர், யாகமாம்பரிமேதமிழைக்கலார். (௫௧)

ஆசினற்குலநால்வரினுடிதேன்ஞர், கூசுநீங்குப்பிறந்தைபினைகொள்வோர்
மாசித்திங்கட்படிபவர்மாணபயன, பேசக்காட்டிடுமபீடிலன்யானரோ. (௫௨)

வாய்ந்தமாகமதியினிலாடினேன், பாய்ந்துலாவும்பகிரதியாதிநீர்
தோய்ந்தவன்பலஞ்சொல்லினழிவிலா, தேய்ந்தநாடுறநவீடும்பினெய்துவான். ௫௩

புருடனுடிலும்பொற்றொடியாடினு, மருடரும்படிவந்திடுநாண்முத
லிருடரும்பயன்செய்தனயாவையு, மருடருந்தனுக்கோடியகற்றுமால். (௫௪)

இறந்திடாவிமையோர்தங்குழாத்தினுட், சிறந்தகோசலைசெம்மலைப்போலவே
யிறந்திடாதவளர்புனல்யாடினு, மறந்தருந்தனுக்கோடியதிகமால். (௫௫)

அங்கண்வார்தனுக்கோடியளித்திடு, மெங்கண்வேட்டவுமெல்லொருமுப்பதும்
வெங்கணிந்தியம்வென்றுயர்மாகவான், றிங்கண்மூழ்கிறசிவபதஞ்சேரலாம். (ருசு)

உரமனத்தெழுசீற்றம்விட்டொருத், தரமயின்றுதடந்தனுக்கோடியில்
வரமளித்திடுமாசியிலாடுவான், பிரமகத்தியினீங்கிப்பிறங்குவான. (ருஎ)

மாசிமாதம்வயத்தனுக்கோடியி, லாசுதீரவடைந்திதிலாடியே
யீசர்கன்குமிலீரிருபாமமும், வீசியுண்டிவிழியுறங்காமலே. (ருஅ)

இந்தியங்களடக்கியிராகவன், முந்திறைஞ்சியமுக்கண்முதல்வனை
யுந்துபூசையுஞற்றித்திவாகரன், வந்துதோன்றிடும்வேலையினமற்றநாள். (ருகூ)

கோடுசேர்தனுக்கோடிமுன்னீரொலா, மாடிநித்தநியமங்களாற்றியே
நீடிராமன்வழுத்துநிருத்தனைப், பாடியன்பிற்பரவிப்பணிந்தபின. (சூ0)

ஒல்லுமாத்திரமொண்பொருண்மண்பசு, நல்லசெந்நெற்றிலமுதனல்கியே
வல்லவாறுமறையவர்க்கூட்டுவித், தல்லறீரவவரருள்பெறறபோ. (சூக)

புகறலின்றிபபுரிகபினபாரணம், பகருமிம்முறைபண்ணினர்க்கெம்பிரா
னகமடங்கவகற்றியளித்திடு, மிகபரஙகளிரண்டினுமின்பமே. (சூஉ)

எவ்வகைத்தவருத்தங்களெய்தியு, மெய்வகுப்புறுமுத்திவிரும்பினோன்
றெய்வமாசிநற்றிங்களிலாடுவான், கவ்வைவெண்டிரைக்கார்முகக்கோடியில். சூங

மன்னுமகாதவுதயமகோதய, மென்னுமிங்கிவற்றிப்புனலாடினோன்
றன்னதீவினையாவையுஞ்சாய்த்திடு, முன்னுமினபமுமுத்தியுமெய்துவான். (சூச)

செல்வமுக்தொழிற்றேவருமன்னவன், சொல்வயத்தர்தொகுத்தவிருதிறத்
தெல்வடநதுதயமபடிவாாக்கிலே, நல்வளங்கெழுஞாலத்துதயமே. (சூரு)

மறறவர்க்குமனுமுதலானநூல், கற்றுச்செய்பரிகாரங்களின்றியே
யுறறசீவினையோடுமுண்டாயிடும், பறறுவேள்விப்பயன்கள்பண்ணுமலே. (சூசூ)

கதிரவனுடையுமபாநகள்கவருநா, ளிதனிலாடிலிருபிறப்பாளர்தம்
வதையின்மாசறுமற்றவர்பெற்றிடுஞ், சிதைவில்பேறறினைச்சேடனுஞ்செப்பிலான்.

இரவிதிங்களெனப்படுந்தேவரா, யரவமுண்டிடும்வேலையமிழ்ந்தினோர்
பரவுபாவப்பதாகினிபாற்றிடுங், குரவிராகடனுக்கோடிதனம்பினால். (சூஅ)

காயும்வெண்கதிர்செங்கதிர்கட்செவிக், சாயநல்லுணவாம்பொழுதாடினோர்
தூயதீர்த்தமுழுவதுந்தோய்ந்தவ, ரேயுமின்பமிவற்றையமிலலையே. (சூகூ)

ஆகலாலிங்குமங்குமளப்பிலாப், போகநல்கும்பொருதனுக்கோடியிற்
ருகமாற்றிடுந்தண்புனலாடுமா, றேகுவீரினிநீருமிருடிகாள். (எ0)

விற்பிறங்குமிராமன்விற்கோடியி, னற்பலந்தருபிண்டங்கணல்கினோன்
முற்பிதிர்க்களுந்தரமுடிவிலாக், கற்பகாலநிரம்பிக்களிப்பரால். (எக)

அண்டர்நாதனமர்கந்தமாதனங், கண்டசேதுக்கவுசலைசேய்கரங்
கொண்டுவார்தனுக்கோடியிவற்றினிற், பிண்டமீந்தவர்க்கில்லைபிதிர்கடன். (எஉ)

மூவிடங்களுமுன்னிமுனிவிர்கா, டேவனுற்றுந்திறத்தன்தென்புல
மேவினோர்தமிருணவிமோசனத், தாவினுமந்தமக்குளவாகுமால். (எங)

வேறு.

ஆதலிற்றனுக்கோடியிலாம்மாருருயிர்க்கிளைபபாயினுமேருவீர்
மோதடற்சிலைத்தேசிகனீடுசெய்மூரிவிற்பரித்தாமன்முன்முடிஞன்
போனநிக்திளைக்காதலிமுவிவான்போகவிட்டவத்தீவினைபோக்கவே
யாதனைப்பவத்தீதறமாசவீரீறுமக்கிலைசத்தேமியவியாமரோ. (எசு)

தனுக்கோடிச்சருக்கமுற்றிற்று.

ஆகதிருவிருத்தம் கஅஉசு.

---

# அசுவத்தாமாச்சருக்கம்.

---

கரகபாணியயனைநேர்கதியினீடுமுனிவராங்
குரகநேருயிர்த்தயர்ந்துறங்குகின்றுளார்தமை
விரகிலாதுகொன்றறமீளவந்தவெம்பவந
துரகதாமனீர்தறுன்கூறகேட்டல்வேண்டினேம். (க)

வேதநான்குவகைசெயும்வியாதமாணவகவெமக்
கோதுகின்சொலமுதவுணவட்டலில்லையாகையா
லேதுவொன்றுமினறிநீயெங்கண்மேலிருத்திடும்
போதமுற்றவருள்ளுறபுகலுகெனறுபோறறினூர். (உ)

என்றபோதுசூதனங்கிலங்குவாதராயணன்
மன்றவாசவனசநேர்மலர்ப்பதங்கள்வாழ்த்தியே
யொன்றுஞானமுனிவிர்கணிநவகையோடுகேண்மினென
றன்றியன்றவாறெலாமவர்க்குரைத்தன்மேயினுன். (ங)

பண்டுபாண்டுமைந்தரும்பார்வையில்லிமைந்தருங்
கொண்டவேலைவையகங்கொள்ளுமாறுமாறதாய்
மண்டுபோர்விளைத்தநாள்வைகல்பத்தினளவிலே
விண்டுமேனிவீடுமன்வீடுமன்னினுனரோ. (ச)

மேலையைந்துபகலிலேமெய்துரோணன்விட்டன
னுலிரண்டொடொன்பதுறுகநாடுகண்ணினு
னேலுமங்கர்தம்பிரானெட்டுமேல்கொள்பத்திலே
சாலநீடுசல்லியன்றனைதுறந்துபோயினுன். (ரு)

பாதிதத்துவத்தொகைபட்டவானியத்திலே
யூதைகாளைகதையினுலூருவிண்டுடைந்துதா
னுதனும்பறுஞ்சினுனந்தவேலையரசர்தாம்
போதுவார்கண்மெய்விடாய்போக்குமாறுபுரிகுவான். (சு)

மட்டிலாதமங்கிழ்வினுவளைமுழக்கவருகுவார்
திட்டத்துய்மனீடுதிண்சிகண்டிசிஞ்சயன்முனு
மிட்டமேவுமாசருமேனைவேந்தரனைவருஞ்
சட்டெனபபுகுநதுளார்தங்கடங்கள்பாசறை. (எ)

பின்னர்வீரரைவரும்பின்னைகேள்வன்சாத்தகி
யென்றுமந்தவிருவரோடிறங்கிடாதமவுலியான்
மன்னுமாடைமண்டபமருங்குசென்றுமேவினார்
வெண்ணிடாமிடைந்தகான்வெள்ளிடைக்கணுற்றபோல். (அ)

ஆண்டுறைந்தசண்டருமமாத்தியுமிருத்தரும்
பூண்டுதாளிறைஞ்சினார்புயங்கவீரகேதன
னேண்டயங்குமிறகன்றோமம்யாவும்வெளவியே
வேண்டுசெய்கையுவகையால்வீற்றிருந்தன்மேயினார். (௯)

கைவலங்கொடிகிரிசேர்காளமேகமேனியா
னைவரோடுமாயிடையாவதொன்றுகூறுவா
னுய்வதனம்பொருட்டுநீருடையிருக்கையின்புற
நைவுறுமனம்மொழிகண்ணுமின்கவென்றனன். (க0)

அறிவுகொண்டுசெய்வதென்னைவராழியானொடும்
புறவிலங்கிடாப்பிலம்புகுந்துகொண்டபொருளைமீ
தெரிபுணர்கொள்ளாகையூறநெடுதியங்கணிரவெலாஞ்
செறுநாமாளவெனநசீர்த்திருவினோடுமருவினார். (கக)

சுரிமுகச்சுலாயெழீஇத்துள்ளவீசிப்பாரொலாங்
கீழ்த்திவிலாதுசிதறிடுஞ்சிகரக்குழாங்கடா
மரியகண்ணனைவரோடணுகவந்தவளவிலாப்
புரிவினீடுமங்கலப்பொரியிறைந்தல்போலுமால். (கஉ)

ஆருமந்தநிசியினூடவணிருந்தகண்ணன்மு
னேறைகையாறுவீசுமாறொருவிதாங்கழுவணமூர்
பாகவிண்வெறிதிரேல்பள்ளிகொளுதென்னவே
நாகநீடுநல்லணைநல்கல்போலமல்குமால். (கங)

அறுவையில்லசன்புறமைவரோடுமைவண
னுறுவசெண்ணியுறறபினுறறுளார்கள்கிருபனு
மறுவிலர்தகிருதவன்மாவும்வாசித்தாமனுந்
தெறுவியாளதுவசனைச்சென்றுகங்குல்சேருமுன். (கச)

சேருமூவர்கான்மகன்செய்யவெய்யதண்டினு
லூருவிண்டுடைந்துவீழ்ந்துடல்புரண்டுமண்ணின்மே
லாரையும்வணங்குறுவந்தன்மைந்தன்மூழ்குறுஞ்
சோரிவாரிகண்டுதாந்துன்பவாரிமூழ்கினார். (கரு)

கதையின்வீமனறைதலாற்கவான்பிளந்துசோர்கறைப்
புதையுமேனிபூழியாற்போர்த்தநீடுபுரவல
னுதையவெற்பில்வீசிடுமூசைவீசுதூளுடற்
றுதையும்வாலசூரியன்றோற்றமென்னவைகினான். (கசு)

கண்கலுழ்ந்தமூவரைக்கண்டுகண்ணிலான்மகன்
விண்கவிழ்ந்ததாரைபோல்விழிகள்சிந்தவெள்ளநீ
ரொண்கவன்றிரங்கினானினைதல்கண்டழுங்கியே
புண்கணலிறைத்தபோற்புரவித்தாமன்கூறியே. (கஎ)

கடியவீமசேனனுங்காலிறும்பல்கைக்கதை
யடியினால்விழுந்தெழாதழுதநெஞ்சுதழுதழுத்
தொடிவுகூர்சுயோதனற்கொன்றுகூறவெஃகியே
யிடியெனாவெகுண்டெழீஇயிவுளித்தாமனோதுவான். (கஅ)

ஐவர்பாண்டவர்க்குமென்றனைப்பதைக்கவாருயிர்
மைவழங்குநெஞ்சராய்வஞ்சமாற்றிவெளவிநீ
ரிவ்வொருதவத்துயமொன்றும்வேலையேறினும்
பைவியாளதுவசநின்பழங்கருத்திலேனியான். (கசு)

கிருபனேகண்மியாவெனைநீவிடுக்கிலின்றிராப்
பரிதிதோன்றுமுன்னரேபாண்டவர்மைந்தரொருவரு
மொருவலின்றுசிஞ்சயரோடுவேலாருமாவெஞர்
பொருதுகொல்வன்யான்செயும்புன்னியத்தினூனையே. (உ0)

வேறு.

இனையதுகூறக்கேளாவிகற்றுரியோதனன்று
னனையதுசெய்வலெனறுவுறலபொழிவிழியாற்பார்த்து
முனைவனாங்கிருபன்றனைமுடங்குவிற்றுரவனின்ற
தனையனைநமதுதானைத்தலைவனாச்செய்திடென்றான். (உக)

அன்னவாறவனுமன்னோற்கன்றபிடேகஞ்செய்தான்
பின்னர்க்துரிசிறனைத்தழீஇவிடைபெறவபோற்றி
யுனாசிர்ப்போசனோடுமுவரிருவோருமைவர்
பொன்னெடுந்தலின்மாடுபோயினார்பொழுதுபோமுன். (உஉ)

அஞ்சுபோராவிகொள்வானடைசவம்முலர்தாங்க
ளஞ்சுபோராகியன்னோரடலொலிக்கசனிகட்ட
நஞ்சுகாலரவம்போலநவ்வுநீர்நீங்கிநெஞ்ச
நஞ்சுகாறமாறுற்றுநாடியபின்சென்றார்கள். (உங)

ஓடினாரினிப்புற்றங்களைருசிறிருநதார்தம்மு
னோடினார்மீளினம்மைநந்தியாவத்தமாலை
சூடினான்கொல்லுமென்றுத்துண்ணெனவெருவியுள்ளம்
வாடினார்மருந்துகண்டார்வளமலியடவியொன்று. (உச)

காம்புடைமலர்கள்பூத்தகாமருதடங்களாலும்
பூம்பணைப்பொழில்களாலும்பொருசிறைப்பறவையாலும்
வாம்பிணையாளியெண்குமரைகரிகவையமாமுன்
றும்பலவிலங்கினாலுமணிகிளர்வல்லியாலும். (உரு)

இடைவெளியின்றிமல்குமீர்நதரிர்க்கானநோக்கி
யடைவதோரரணமாகவதனிடைப்புக்குத்தணணீர்
தடையில்வாம்புரவிக்கூட்டித்தாங்களுமுண்டபோங்கோர்
வடதருநீழல்காணூஉமான்றடந்தேரிழிந்தார். (உசு)

இழிந்துடற்புனிதம்பண்ணியிருந்தனர்நியமமாற்றிக்
கழிந்ததுகதிருங்கங்குற்காலமுங்கலந்ததாட
லொழிந்தனபகற்சரிக்குமுயிரெலாமுறக்கமுற்ற
வெழுந்தனவுழிதர்கிற்குமிரவினினுயிர்களெல்லாம். (உஎ)

ஆயிடையலக்கண்கூருமன்னவர்மூவர்தம்முட்
போயிடர்கிருபன்றனும்போசனும்பூமியென்னும்
பாயலிற்றுயின்றாரங்கட்பாய்பரித்தாமன்சீற்றத்
தீயினால்வெதும்பித்துஞ்சான்சிந்தைநோய்கொண்டிருந்தான். (௨௮)

கார்ப்புழைக்கரங்களாதிகலந்துறைவிலங்கினேதை
யேர்ப்புழைச்செவியிற்கேளாவிறுமுரசரவம்போலும்
போர்ப்பிறர்கொடிபோலன்றிபபொறைபிறேன்புகழ்ப்பதாகை
யார்ப்பரித்திடுங்கொலென்றுவயர்வுறுமசுவத்தாமன். (௨௯)

தழைத்தடங்கானுலாவுநந்தியைக்கானூஉத்தண்டம்
புழைக்கரமாகவீமன்புக்கனனென்னவஞ்சும்
பிழைத்தனமரிதிறந்தபிதாவினிமீள்வதில்லை
யிழைத்ததீநெற்றுக்கென்றுவிரங்கிடுமிவுரித்தாமன். (௩௦)

நிசியெரிதாருவின்பானீடுமாலோடுஞ்சேர்ந்த
பசுமுகில்பார்த்தியாரோபடர்வனம்புக்கசெய்தி
விசயனுக்குரைத்தார்பொற்றேர்மீதனைநதிட்டானென்று
வசைவுறீஇமயங்கிச்சோருமாண்டகையசுவத்தாமன். (௩௧)

வ ங்கரிமுதுகிலேறிமணித்தலைபிங்கலாறறு
துயங்கிநேர்கடுப்பிலோடியுற்றிடுமனையைநோக்கிச்
சயங்கிளர்நகுலனாருந்தாவுபோவாசியெனறுத்
துயங்கியுள்வாடியாகந்துளங்கிடுநதுரகத்தாமன். (௩௨)

சூழியினீங்கிவான்மேற்சுடர்நெடுவாளைதுளள்க்
காழிருள்கிழித்தசோதிகண்ணினுட்கலத்தலகாறு
வாழியசாதேவன்கைம்மருவலார்வரைகொண்மாட்
போழொளிவாளிறுடிப்புலம்பிடும்புரவித்தாமன். (௩௩)

இரவினிலுறங்காதிவ்வாறிருந்துழியிவுளித்தாமன்
பரவுபல்காகந்துஞ்சும்பணைமலிகோளியின்மே
லுரம்பெருங்கரியசெய்யவுருவுடனொலிக்கும்வெய்ய
குரலினைக்காட்டிச்செல்லுங்குராலினைக்குறித்துக்கண்டான். (௩௪)

பெரியவக்கூகைபின்னர்ப்பிறங்கொலியொன்றுசெய்து
விரிசிழற்கொம்பருடுமேனியைமறைத்துவைகித்
திரியவுங்கொடிகளெல்லாந்திடுக்கிடவெழுந்துபற்றிக்
கரியவக்காக்கைக்கூட்டங்கலைத்துயிருண்டதன்றே. (௩௫)

கலைத்துயிருண்டுகாக்கைக்கால்களுந்தலையுமூக்கு
மலைத்திடுஞ்சிறையும்வாலுமடங்கலும்வேறுவேறு
வுலைத்துடன்பறித்துவீசியொருசிறிதிடமிலாம
லிலைத்தடங்கோளியெங்குமிறைத்தினிதிருந்ததம்மா. (௩௬)

முற்பகலிழைத்ததீமைமுற்றிடுங்கொடியர்தம்பாற்
பிற்பகலொருகால்வென்றோர்பின்னொருகாலந்தோற்பா
ரற்பர்கள்பலருமாற்றாராண்டகையொருவற்கென்னுஞ்
சொற்பொருடெளியயாருந்தொலைந்தனகாக்கையீட்டம். (௩௭)

ஆருமச்செய்கைகண்டவப்பொழுதசுவத்தாமன்
கூகையைக்குரவனாகக்கொண்டிதுவுயிற்றுமாற்று
லேகியாமொருவனாகவிரவினில்விரவலார்க்கு
மாசனாடளிக்குமென்றுமனத்திடைவலித்தான்மன்னோ. (௩௮)

அருமையுண்டைவர்நேர்சென்றமர்விளைத்தாவிகோட
லொருமைசேருபாயம்வேண்டுமூரகக்கேதனன்றனுடும்
பெருமிதம்பேசிவந்தேம்பிறழ்விலாசெஞ்சவாறு
வருமிதங்கடைப்பிடித்தனமன்னுயிரவைகருமுண்டால். (௩௯)

மன்னவனவனிற்பார்மாயவஞ்சனையினாலுந்
துன்னலர்க்கோறன்மாண்பேசுவோசனன்றனையர்வீழ்த்தா
ரொன்னலர்புணர்ப்பினாலுங்குறுவனேறிமுன்னம்
பின்றுனமரபுநேர்ந்தபண்டிதர்பகர்ந்ததுண்டால். (௪௦)

உண்புவர்வழிநடப்போரோரிடத்திருப்போர்கள்குற
கண்படுகின்றோமெய்பிறகளைமிகப்படைத்தோரெங்கும்
புண்படவடிபட்டுள்ளம்புழுங்குவார்போரிலாக்கை
மண்படவிழுந்தோர்கையின்மாண்படையிழந்தோர்தம்மை. (௪௧)

இறச்செயலாகும்வேண்டார்க்கியாமுமிவ்வாறுசெய்த
லறச்செயலென்றுதுஞ்சமைவரைப்புக்கவெண்ணிப்
பொறைச்செயறகிருபனோடும்போசனையெழுப்பியாங்கோர்
முறைச்செயன்முகூர்த்தமொன்றுமுன்னறுபுமொழியலுற்றான். (௪௨)

மன்னவர்மன்னனாகிவலியினின்வலியோனாகிப
புன்மைதீர்புனிதனாகும்புயங்ககேதனனைக்கொன்ற
றொன்னலருபாயத்தாலேயுன்னைத்தனைவிமனத்தோ
வெந்நிலையவாகளேனுமிறைநேர்ந்தோமவுலிமீதே. (௪௩)

ஆதலினவாதம்மையாவண்டென்னாதெங்ப
போதுறுவகைவிளைத்துப்பொருதணைமாரிதூவிப
பாதிநள்ளிரவிற்சென்றுபட்டுக்கொடல்வேண்டுமென்றா
னீதவனுவலக்கேளாவியல்புழிக்கிருபன்சொல்வான். (௪௪)

பொருவிரிதுரோணனல்குபுண்ணியபுதல்வகேண்மோ
தருமமன்றறங்கவாரைத்தடிந்திடல்செய்தோவிட்டுக
குருமுனையேதியின்றிக்கொயயுளைநீத்தோக்கோறல்
பெருமையன்றிழிப்பாயரும்பிழையிதுவிடுத்திபின்னாய். (௪௫)

வலம்புரித்தாமன்றனைதமனைவிகாந்தாரிமாறு
நலம்புரிவிதுரனின்னோர்நவிறநிதிடற்கோறுமென்றனை
சலம்புரிபுரவித்தாமன்றனதுமறுத்துப்பின்னு
மலம்புரிகிருபனோடுமடங்கலினறைதலுற்றான். (௪௬)

முந்தைநாளாகவத்தின்முண்டபோர்ப்பாண்டுமைந்த
ரெந்தையைப்புணர்ப்பினாலேயின்னுயிர்கொண்டசெய்கை
சிந்தைநின்றீருமன்றிச்சிறியனுந்திட்டத்துய்மன்
றந்தையைக்கொன்றனென்றுசபையெதிர்சாற்றலாற்றேன். (௪௭)

மொய்வயப்போரிலெந்தைமுடிந்திடமுடித்ததன்றி
வைவயத்தனைவிட்டவரநிமகனைச்செற்றான்
செய்வயப்பற்குனன்றான்சிகண்டியைத்தண்டமாக்கொண்
டைவரோயிடித்தார்முன்னரருநெறியறத்தின்கூலம். (௪அ)

மறுத்துரையூடலொன்றுமாதலவின்றிராவி
லறுத்திடுகின்றேனந்தவைவரையறிதியென்று
நிறுத்தவாம்பரிகடம்மைநெடுங்கொடித்தேரிற்பூட்டிக்
கறுத்துளங்கடிதிலேறிக்கந்துகத்தாமன்போனான். (௪௯)

இருவருமவன்பின்பற்றியேகினரிவுளித்தாமன்
கருகிருட்சீரையில்லின்கடைப்புறஞ்சென்றுநின்று
பெருகியகங்கைவேணிப்பிஞ்ஞகன்பாதஞ்சானித்
துருகினனளித்தானொள்வாளொன்றுமைநங்கைகேள்வன். (௫0)

வாளொளிவிளக்கமேந்திமடிமனைப்புகுவான்வாயிற்
கேளுறுகிருபனோடுகிருதவன்மாவைவைத்துத்
தோளிணைபணைப்பவெங்குஞ்சுற்றுபுதிரியாவல்லே
மீளுறீஇத்திட்டத்துய்மன்வியன்றுயில்வீட்டில்வந்தான். (௫௧)

சென்றிவன்புகுதுமெல்லைத்திரள்புயத்திட்டத்துய்மன்
முன்றருவோர்களெல்லாமுயன்றபோரினைப்பிறைலே
கன்றியதானையோடுங்கண்படைகொண்டாரங்கட்
டுன்றுவெண்டுகிலார்பள்ளிதயிலும்பாஞ்சாலரகண்டான். (௫௨)

காண்டலுமுதைத்தான்காலாற்கணமிசையிலமர்நீங்கி
யாண்டெழுந்திவனைக்கண்டாளவனவன்புரவித்தாமன்
மீண்டவனைகுஞ்சிபற்றிமேதினிதனைவில்வீழ்த்திப்
பூண்டபூங்கழலான்மோதப்புரட்டினன்புரளவாகம். (௫௩)

அந்நிலைத்திட்டத்துய்மனச்சுறீஇபுறக்கநீங்கான்
றன்னுடல்பதைப்புறுமற்றளாந்தனனவன்களத்தை
வினவினைநாணாற்கட்டிமெழுகமறுக்குமாபோற்
கன்னிகர்மார்பிலேறியரிந்தனன்கறவுத்தாமன். (௫௪)

பதாகினிமுழுதுங்கொன்றுபாவைபாஞ்சாலிபால
ருதாமணியுச்சிகண்டியோங்குசோமகாமுன்னோர்
மதாசலம்புரவிகாலாண்மற்றவனுள்ளவெல்லாஞ்
சதாகதிசேர்தழறபோற்றடிந்தனன்றன்கைவாளால். (௫௫)

ஆடுபோர்க்கலக்கத்தஞ்சியாடைமன்படர்தை நீங்கி
யோடுவார்தம்மைப்பற்றியுடன்றுரந்துயிர்குடிந்தார்
நீடுயர்வாயினின்றகிருபனுங்கிருபன்றானும்
வீடுபேறுழிவேலைபோன்றதக்கந்துல்வேலை. (௫௬)

அந்நிலம்மூவரிவ்வாறடுங்கொலையகனைநாடிக்
குந்திதன்புதல்வர்க்கஞ்சிக்குலைகுலைந்தவலங்கூரா
வுந்தியகடுப்பிறேடியொருவரோடொருவர்கூடார்
சிந்தினர்சென்றார்செய்ததீவினைக்காற்றரப்ப. (௫௭)

ஒற்கநீக்குமுளம்வெளிசெய்திடுஞ், சொற்கமீயுந்துயரநதுடைத்திடும்
வற்கநீடுமருட்மவமாற்றிடு, மற்கடிந்தருளானந்தநல்கிடும். (எசு)

துரிசுகாட்டுஞ்சுவன*மொழித்திடுங், கரிசுதீர்க்குங்கடவுளர்போற்றிடும்
பரிசுநல்குந்தசரதனபாலனுங், குரிசிலேந்துகுனிசிலைக்கோடியே. (எஎ)

சாந்தியாதிதவநெறிதநதிடு, மாந்தர்காலவரைக்கிடைநாளிலே
வீந்திடாமையும்வென்றியுமீயிசை, யேய்ந்தவாயுளுமின்புங்கொடுத்திடும். (எஅ)

ஓங்குமேன்மையுளாயிலடங்கிடா, வாங்குவார்தனுக்கோடியின்மாசமொன்
றுங்கணெய்தியிடையின்றமிழ்நதிறு, னீங்குநித்திரைச்செய்தநெடுங்கொலை. (எகூ)

என்றுவேதவியாதனியம்பலு, மன்றுவாம்பரித்தாமனசறுமைச்
சென்றுவைகலிடையின்றித்திங்களி, லொன்றுமூழ்கினன்சங்கர்பமோதியே. (அ0)

காலமூன்றுங்கவுசலைகான்முளை, மாலொழித்தவரதனைப்போறறவா
னேலுநதிங்களிறுதித்தினத்தினிற், கூலமார்தனுக்கோடியிலாடியே. (அக)

ஈசனஞ்செழுத்தெண்ணியிருந்துப, வாசமாகவருந்தவின்மாற்றியே
வீசுபானுவிரிநதெழும்வேலையிற், கோசலேசன்விற்கோடிமுடைநதரோ. (அஉ)

அன்றிராமனருச்சனைசெய்திடுங், குன்றவிற்கைக்குழகன்றிருமுன
நின்றுபரிபயிறைத்திடக்கண்கணி, நன்றுசேரின்பக்கூத்துநடித்தனன். (அங)

ஆடல்செய்திடுமென்பினைநோக்கியே, பாடல்விஞ்சையர்பண்ணவர்சூழ்நதிட
வேடுலாங்குழலேழையொடெய்தினுன், கோடற்றுமன்முன்கொன்றையநதாமனே

வந்துநினறவளர்மறையுச்சிமேற், செந்தனிப்பொருட்செல்வுதைக்காண்டலு
முந்துவாம்பரித்தாமனுருகிநெஞ், சிந்துவேணியனருள்பணிந்தேத்துவான. (அரு)

ஆடுகாலவகாலவன்றம்புய, ஞடுசேகரநற்கருணைகர
பாசிசாமமெய்ப்பாதிகொளசாமமா, னீடுமதுதநெடுந்நாடைமத்தனே. (அசு)

தியகங்கையாய்சென்னியிற்கங்கையாய், தூயசோதியாயதொண்டரைச்சோதியாய்
தூயினல்லனேசார்புளனல்லனே, யாயகண்டனேயலனுறழ்கண்டனே. (அஎ)

அன்பர்க்கணணியாயம்புலிக்கண்ணியா, யென்பின்றுரினுயெண்கடித்தாரினுய்
பொன்கொள்வேணியாய்போதகவேணியா, யின்பவீட்டினுயென்பவம்வீட்டினுய்.

பாகவில்லனேபற்பசவில்லனே, மாகநாதனேமாமறைநாதனே
வேகவானனேவெங்கைக்கவானனே, நாகநேத்திராநன்னுதனேத்திரா. (அகூ)

கம்புட்காதினுய்காமனைக்காதினுய், செம்பொற்பாதனேசெப்புநாறபாதனே
யும்பர்க்கும்பனேயோர்முலைக்கும்பனே, யம்புமாலனேயார்தருமாலனே. (கூ0)

என்னையாளவென்றேழுலகீன்றிடு, மன்னையோடுமடைந்தனையையனே
முன்னைமாலயன்காணருமூர்த்தியா, முன்னையான்செய்தவமுள்ளதே. கூக

போற்றிபோற்றிபுயங்கபுராதன, போற்றிபோற்றிபொருவிரிபூரண
போற்றிபோற்றிபுரவெனப்போற்றினு, னேற்றினுன்மகிழ்ந்துள்ளமியம்புவான்.()

வருதிவாம்பரித்தாமவுறங்கிடு, நிருபனைக்கொன்னெடும்பழிநீங்கினு {றுன்.
யொருவர்முன்புநாமுற்றுழியன்னவர்க், கருமையொன்றிலைவேண்டிற்றறைகென்

* சுவப்பனமென்பது—சுவனமென நின்றது.

நிரப்பழிச்சிநெடும்பவநீங்கினேன், சிற்பரம்பரமற்றுண்டோரிசன்
முற்பிறங்கருணல்லறமுறநிலாக், குற்பவங்களிற்கொடியுறவுமாஞ்சு (கூஎ)

ஆண்டுசோதிக்குமிணையடிநேயமே, வேண்டும்வேறிலேனென்றவசிக்கெனத்
தாணுடுங்கொய்யுளேத்தாமனவணங்கினு, மூண்டநாகனுமவ்வரநல்கினன். (கூஅ)

வள்ளலன்னவன்காணமறைந்தனன், றள்ளருகதகைச்சாமனுஞ்சூழ்வினை
யுள்ளனீங்கினனன்றதொட்டுநதனை, வெள்ளமின்மொழிதோற்றனர்யாவரும். (கூகூ)

வேறு.

வருதிர்மாதவிராவாம்பரித்தசாமனோர்வளிராகவன்வாண்டாருக்கோடிநீர்
பிரிவிலாதெழும்வாருசையுறாநீள்பெருமைபாவிடார்திருமருட்கூடினான்
விரிவிஞலிமிர்தருமக்கொக்கோனுமவிலைவெலாமிதுதான்[illegible]லோக்கர்க்குறு
பருகுவாரெவர்தாம்படிப்பார்கடாம்பரமகாரணர்பூங்கழற்சேவரே. (௱)

அசுவத்தாமாசருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ககூஉங.

---

# தருமகுத்தச்சருக்கம்.

---

அரியமாதவர்தம்மிசைக்கெதிர்ந்துசென்றுக்கினனன்பினுற்
றிரியவுந்தருக்கோடிநீரதன்மேனமையொன்றதுசெப்புவான்
பரிவினுற்றிரிபண்டொர்மன்னவனுண்டவன்பெயர்பகருவார
தருமகுத்தனெனுமதக்குலநந்தனல்கியதனயனே. (க).

வாளில்வைத்திடும்வென்றிவாம்பரிமன்னன்மன்னவர்சென்னிதன்
றாளில்வைத்திடுநாசனஞ்சமிறைமகட்கருடந்திடு
நாளில்வைத்திடுநலவளங்கெழுஞாலமங்கையைநீங்கசேய
தோளில்வைத்தடல்வாயில்வேடுவர்சூழ்புலப்பகைசாடியே. (உ)

உண்டுறைவளியூனேரீஇத்தவமுன்னிநீள்வனமுற்றனன்
வண்டுறைநறவொழுகுதார்ப்புயமைந்தனும்பினர்மாதவா
மிண்டுநாம்புநேருநோலர்வென்கொடுத்திடமுன்கொடாக்
கொண்டுநாடுபுநீதிதானமுறைகுவலயம்புரவுற்றனன். (௩)

அமையமன்னதில்வேள்வியெண்ணிலவமரர்நாயகனுதியோா
தமதுசிந்தனைமகிழ்வுறும்படிதானிழைத்தனனந்தணர்க்
கிமிழ்திரைப்புனலூருமேமமுமீந்தளித்தனனுதலாற்
சுமைநிலத்தவர்தத்தமக்கியறுறைவழாநெறிதுன்னினார். (௪)

கருதுநெஞ்சுறுகள்வருங்கொலைகளவுசெய்திலர்காசினி
நிருபனுகியதருமகுத்தனுநீர்மையிற்பிறழாமலே
பெருகுபார்மகடுயர்தணிந்திசைபெருகவைகுறும்வைகலின்
மிருகவேட்டையின்வெஃகிவாசியின்மேற்கொளாவனமேவினன். (௫)

வேரின்வாய்கமழ்பல்வுசண்பகம்வெண்டுணர்ப்புன்னைமாதுளந்
தூரவேவளர்நெலுங்கைகோங்கொடுதூங்குதீங்கனியோங்குமாப்
பாரநீபமசோகுபச்சிலைபன்னிபூங்குமிழ்பாடல
மாரமாரகிலாணெருங்கிய்மரசுமேவியவடவியே. (௬)

நவசரோருகராசன்மலர்க்கருநாரவண்டினமொய்த்தலாற்
கவருநல்லிசையாழினிற்றிகழ்காமர்பத்தரின்மல்கவே
யிவருநீண்முளைகைமாடகம்புரையேரிலஞ்சியதெங்கணுந்
குவலயம்பொலிவெய்தவாசருங்குரிசின்மேவியகானமே. (௭)

கம்பமைக்கடவருளிதூங்கிக்கரவமைக்குலமெங்கணும்
வெம்பழறபொறிச்சதசெஞ்சுடர்வெருகனெண்கினமெங்கணுங்
கொம்பினிடைபுரிதிருகினிகுடுதிகொண்டுலாங்கலையெங்கணு
மம்புலித்தருமரயினிலகாளிமேவியவடவியே. (௮)

பாங்குபூங்கிளிபாடவாடல்செயபச்சைமாமயிலெங்கணு
ஞாங்காவலைமடிசைபோய்செவிசைநாடுகோகிலமெங்கணுந்
தூங்குபளுசரவுசலாடிபுகூழ்தரிதியினமெங்கணு
மோங்குநீகானவுவயியானோர்துங்கவுதாரிமேவியகானமே. (௯)

புறமகசதுறையாகமேருபுண்ணியத்துறையுட்படுந்
மற்றமகத்துறைபலகலைத்துறைசேர்மறைத்துறைதிரிபுசான்
மறமகத்துறையாவருட்டுறைமருவுமாதவர்வாழ்வதா
மறமகத்தியன்மன்னனத்திரியோடடைந்திடுமடவியே. (௧௦)

ஆயிடைத்திரிகாலையெல்லியடைந்ததண்ணலுமந்திவாய
நேயமிக்குயர்சந்தியின்கடனேர்முடிக்கருணினைவொடுங்
காயமேறதிரிகொண்டமந்திரமெண்ணிவெம்புலிகானமாந்
தீயுமஞ்சுபுதாருவின்மிசைசென்றிருந்தனனன்றரோ. (௧௧)

வேறு.

ஆங்கணுறியமொன்றதுதானடங்காமடங்கலதுதரப்ப
வேங்கிநடுங்கியிளைத்தோடியிறைவனிருக்கும்பாதவத்தி
னோங்குகடுப்பினுடனேறியுலகமுழுதமொருருடைக்கீழ்த்
தாங்குநருமருத்தனைஞ்சயவாளரியைக்கண்டுரைக்கும். (௧௨)

வெருவாதொழிதிவேல்வேந்தேவிடபியிதன்கண்விடிவளவு
மிருவேமிருந்துமரத்தடியிலிருக்குமரியொன்றெல்லியிதி
லொருபாதியும்யான்விழித்திருப்பவுறங்குநீமற்றொருபாதி
யிருபாதியிலவன்யானவிழித்துநீயிங்கிருத்தியென்றதுவே. (௧௩)

நன்றென்றுளங்கொண்டுயிர்பிழைப்பானந்தன்மகனுந்த்தமதி
லொன்றுபாதிவிழித்துயின்றனுளியம்புரப்பவதுபோழ்தில்
வென்றிமடங்கல்விளிதசெண்கைவிடுவாய்தள்ளிவேந்தனைநீ
யென்றுநரரின்மிகக்கொடியரிறைவரொனவுமியற்பல்லம். (௧௪)

வயமாவுநனையெதிர்நோக்கிவனத்திற்றிரியுநீயொன்று
நயமாரறத்தின்றிறமறியாய்நம்பினோனைக்கொலைபுரிந்தோர்
பயமார்கிரயப்படுகுழியிற்படிவர்பகரும்பழிநீங்கி
யுயமாமகங்களோராயுதமுஞற்றினுமொழியாதால். (௧௫)

பனவக்கொலைமுன்பாதகங்கள்பாற்றற்குளதுபரிகாரந்
தனைநம்பினரைவதைத்தபவஞ்சாயத்துரக்குந்தவமில்லை
கனகவரையும்பெரிதன்றுகருதுங்காலைக்காதலினுன்
மனநண்புடையாருயிர்கவரும்வஞ்சம்பெரிதாமென்றிடலும். (கசு)

பல்லமொழிகேட்டெதிர்மாற்றம்பகராதிருந்ததடன்மடங்கல்
வெல்லுமயில்வேற்றருமகுத்தன்விழித்தானதன்பின்விறலுளியம்
வல்லையிருகண்டுயின்றதவண்மன்னன்மகனைவயப்புலியார்த்
தொல்லையிதனைத்தள்ளுதிநீயொழிந்தாலிடையூறுனக்கெய்தும். (கஎ)

என்னையெனினிக்கிளைசேர்த்திடுவனிப்புலியெழுந்தாலியான்போவன்
பின்னையுளியம்பயாதிரும்பிறழ்வாளுகிர்சேர்பெருவிலங்கு
தன்னைத்துணியேலிஃதிறந்தாற்சாரும்பகைவேறிலைவிடியா
முன்னம்விடுதிதள்ளியெனமொழியவிறைவன்முறைதேரான். (கஅ)

மடியிலுறங்குங்கரடிதனைமறங்கூர்வயமாவிருக்குமரத்
தடியில்விழத்தான்றள்ளுதலுமழியாவறனுண்டாகையினு
லொடிவினகத்தாற்பகும்பணைமேலூன்றிக்காங்களுறத்தழுவி
படியில்வழுவாதுய்ந்ததுயிர்பல்லம்விதிக்காப்பதியாவார். (கக)

அணைந்தாங்காலையதிதியர்சன்மதலாய் [illegible] ம்பிழைத்தா
யினைத்தோர்பிழையுமுனக்கிழைத்தேனில்லையிருவிருங்குலத்தே
னினைத்தாலடைவேனெவ்வடிவு [illegible]
தனைத்தானெடித்தேன் [illegible] காட்டின்பெயர்கண்டாய். (உ0)

ஊனித்துணராதுயங்குமெனையொழித்தபவத்தானுன்மைந்த
னுகித்திரிகிவனத்திடையென்றாசனங்கவருமொப்பம்
வேகித்துன்னத்தூவிறலுளியம் [illegible] ருகபதி [illegible]
யோகிற்சிறந்ததலைமையினுலுன் [illegible] (உக)

அளகைபுரக்குமந்திரியாமவன்மந்திரி [illegible]
குளகுண்கரிசூழிமகிரிகீருமுகியொரு [illegible]
புளகமகுடமுலைதோயும்புரிவாலொன் [illegible] ம்புலவ்கொள்ளா
துளகுபுரையுமுன்கைபல [illegible] பாட்டு [illegible] னையால். (உஉ)

ஏசுபுனையாக்கௌதமன்முனைச்சமரற்காஞ்சமித்தொடிப்பான்
காசுபுனையுங்கண்டருக்கோர்கன்னியுதவுங்கரும்படமா
மாசுபுனையும்வரையதன்கண்வந்தாலுனதுமணிமருங்குற்
றூசுபுனையாநிலைகாணூஉத்துயர்கூரியாகெனச்சபித்தான். (உங)

பெற்றுயதனுல்விலங்குருவம்பேர்பத்திரனுமுன்னக்கநா
ளற்றூர்க்கருளுமளகையர்கோனறத்திற்றிரியானவன்பாங்க
ரும்றொவருமத்தகையருயிரிங்கெனைநீயுணலாமோ
விற்றுமனைத்துஞ்சமாதிபினுலெனணிவேனென்றியம்பியதால். (உச)

பல்லமினையபல்லமொழிபகரக்கேட்டுப்பத்திரனும்
வல்லைமடங்கலுருவகற்றிவயங்குந்தனதன்மந்திரியுஞ்
சொல்லுமுனியர்தனைப்போற்றிச்சூழுஞ்சாபக்கௌதமனு
நல்லமொழிநின்னுடனெனக்காநாணீங்கிடுமீதெனநவின்ருன். (உரு)

சிங்கவுருவந்தீர்ந்தத்தனற்றேர்ந்தேன்சானகாட்டனென
விங்குன்றனைநானெனவணங்கியெண்குமுனியையேமவொளி
யங்கண்விமானந்தனிலேறியளகையடைந்தானதன்பின்னர்த்
திங்குநெறியாலெவ்விடத்துஞ்சானகாட்டன்சரித்தானால். (உசு)

தருமகுத்தனுமத்தன்றனையநகரந்தனையடைந்தான்
கருமந்தெளியுமமைச்சரவற்காணாஉரோவைக்கணாயிருக்கு
மொருமைமனங்கூர்தந்தையுழையுடன்கொண்டணுகியுளமருட்கை
வருமந்நெறிசொற்றெதிர்விடுத்துமன்னன்றிருமுன்வணங்கினார். (உஎ)

அரசனவனுஞ்சைமினிதாளரியமகனோடணைந்திறைஞ்சி
யுரைசெய்திவனுக்குன்மந்தமொழியுமுபாயமுரையென்றான்
வரைசெய்தளப்பின்மறைவருத்தோன்மாணவகன்கேட்டிளபபோதிற்
புரைசெய்மருடீர்பரஞ்சுடரைப்பொழுதுநீடப்புணர்ந்தறைவான். (உஅ)

சானகாட்டன்சாபத்தாற்சார்ந்தகிறுதான்றனிவேட்டை
போனகாட்டிற்கைகேசிபோற்றுருழிறைபுகுதுபவ
மானகாட்டிறபோதியெனவந்தோன்வயவிறகோடியிதற்
கானகாட்டைபிறிதொன்றுலகலாதலனையாகையினால். (உகூ)

நாற்சிறந்ததனுக்கோடிநன்றுமெவற்றுநன்றுகுஞ்
சேணிறசிறந்தவீடுதருஞ்செல்வம்பெருக்குந்தீங்கொருக்குங்
காணிற்சிறந்தமறைபகருங்காட்சித்ததனுறகழல்வேந்தே
பூணிற்சிறந்தபுதல்வனொடும்போதியவணீயெனபபுகன்றான். (௩௦)

வேந்துமுனியுஞ்சைமினிதாள்வீழ்ந்துபணிந்துதனுக்கோடி
போந்துமதலையொடுங்கியமம்போற்றிப்படிந்தானெழுமுன்னங்
காந்துஞ்சுழல்கட்கடிநீங்கிக்கடிதினகன்றதலைக்கங்கை
யேந்துமவுலிக்கோசலைசேயிறையையிறைஞ்சியிருந்தொருநாள். (௩க)

மகனைவிடைகொண்டிறையிருடிவனத்திற்புகுந்தான்மற்றங்கட்
டகவினீடுந்தருமகுத்தன்றனுவிராமநாயகனுக்
ககலுள்பலவுமாடகமுமணியாடைகளுமவைபிறவு
மிகவுமுதவிவிப்பிரர்தாம்வேண்டுவனவுங்கொடுத்தன்பால். (௩உ)

ஏனுதியரோடணிநகரமெய்தியிடர்நீத்தின்பினொடு
மாறுதளித்தான்கடலாடையகலமறத்தினகலாமற்
காறார்மருள்கூருன்மத்தங்கடியகுமரகண்டன்முதற்
கூறார்கொடுங்காற்றனுக்கோடிகுடையுமவர்பாலடையாவே. (௩௩)

சரதமிதுமற்றிருகாலுஞ்சாற்றுகின்றேந்தனுக்கோடி
வரதமணிநீர்துறந்தயனீர்வாஞ்சைபுரிவான்பத்தினையி
னிரதநறும்பால்கிடைத்திருக்கவிரந்துதிரிவான்கள்ளியின்பால்
விரதமருவுஞ்சுடர்ஞானவிளக்கிற்றிகழும்விழியுடையீர். (௩௪)

மொழியும்பிறநீர்தவின்முக்கான்மொழியாவிதன்பேர்மூழ்கினரு
வழியுங்கமலமலரயனூர்வாழுந்திருவின்வளமெய்தும்
பொழியுந்தருணநிலாமவுலிப்பொருளிற்பிறிதாம்பொருளானைத்து
மொழியுநிலையுந்தவநெறியின்மொழியநிலையுமுடையீர்காள். (௩௫)

வேறு.

முரணைகற்றுக்தூயசீர்முனிவிர்மற்றிங்கோதினு
மிருசெவிக்கொண்டோர்கள்பாலிரணியத்தின்சோரமே
பரமகத்தின்கேண்மையோர்பழியனைத்தும்பாறவே
தருமறத்தின்முறையாந்தருமகுத்தன்காதையே. (௧௯)

தருமகுத்தச்சருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௧௯௫௧.

---

# பராவசுச்சருக்கம்.

---

போதிகழ்சூதன்மதித்துமவிருபபொடுபேசுறமுன
றேருமின்மாதவிரற்புதமேசகுதிருமல்கும்
வார்சிலைநீடியகோடியிலுண்டொருவளனின்னும்
பாரதிலுண்டுபராவசுவென்றொருபனவன்முன். (௧)

ஆதியநான்மறையோதியுணர்ந்தவனவனோர்நாட்
டாதையையின்னனெனத்தெரியாதுயிர்தானுண்டான்
றீதறுதீர்ந்ததுகோசலையோநதல்சிலைக்கோடி
யோதனநீர்தனிலாடுபுமறறஃதுளாசெயகேம். (௨)

அவ்வகைசொல்வழியந்தணனையனையறியாம
லுவ்வகைசெற்றதுவிற்றருகோடியினுதகநதோயந
திவ்வகைப்பாவமுருக்கியதென்றதனியல்பெல்லா
மெய்வகைமாதவர்சூதவிரித்துவிளம்பென்றார். (௩)

சென்றுவிளமொழியஞ்செவியூடுசெலச்சூத
னன்றெதிர்கூறுமவாக்கடல்சோபிருகத்துயம
னென்றொருமனனவனுண்டவனீளகடலிடமெங்கு
நன்றுணர்நீதிவழிப்புரவுறறனனகைவேலான். (௪)

சுத்திரவேள்வியினிந்திரனுதியர்தமைவென்றேன
முத்தியுணர்ந்தரயிப்பியனென்பவனமுடிமன்னன்
சித்தம்விருப்புறுதேசிகனாய்மிகுசெயல்வேள்விக்
கொத்தவைமுற்றுநடத்துமறைத்துறைகொண்டுள்ளான். (௫)

ஏரருவாவசுநீடுபராவசுவெனமைந்த
ரோரிருவோருளரன்னரயிப்பியனுதவுற்றோ
ராரணநான்கதனங்கமொராறதனளவாது
நேரியநுண்பொருணூலவையாவுநிறைந்துள்ளார். (௬)

கங்கையினீடுபுகழ்க்கொடைசேர்பிருகத்துய்ம
னிங்கணைவீருயர்சத்திரவேள்வியிழைப்பானென்
றங்கவர்தம்மையழைத்தவுமையனதருள்பெற்றே
பொங்குமருத்துவர்போலொளிமிக்கவர்புக்காரால். (௭)

ஏசறுதந்தைரயிப்பியன்முன்னவனில்லாளோ
டாசிரமத்தினிருந்தனன்மைந்தர்களவ்வேள்வி
மாசறவாற்றினர்மற்றதுகாணியவந்தற்றூர்
காசறுமன்னன்விளித்திடமாதவர்கணமிக்கார். (அ)

ஆங்கவர்கோதமனத்திரிகாசிபனணியாழின்
வாங்கிசைநாரதனீடுபராசரன்மார்க்கண்டன்
றூங்குபுலத்தியன்குற்சன்வசிட்டன்சதானந்தன்
றூங்கொலிவேதவியாதனுடன்கிருதார்த்தக்கன். (௯)

வைப்புலகத்தினெனும்புலகன்கவிவாண்மீகி
தப்பிலரும்பொருணூலுணர்தௌமியன்சாபாலி
யெப்புவியும்புகழ்கௌசிகனென்பவரிவர்மைந்த
ரப்பெரியோரருண்மைந்தர்தம்மைந்தர்களளவில்லார். (க0)

உற்றிடுபண்ணவர்தம்மையருக்கியவுதகத்தான்
மற்றையநல்லுபசாரவிதத்தினின்மன்னன்மு
னற்றீமிலர்ச்சனையாற்றினன்வேள்வியதணிகாண்பான்
சுற்றியநான்குதிறங்கொள்பதாகினிசூழ்போத. (கக)

நீள்விசெயற்கியல்பல்பொருளோடுறும்விறல்வேந்த
ராள்வினைவண்மையொட்டிகள்வன்னிகளகம்வாழ்வோர்
கோள்வினைநீங்குபுகானிலமாதொடுகுறுமுற்றேர்
சூழ்வினைமுற்றும்விடுத்தவர்தாம்பிறர்சூழ்ந்துள்ளோர். (க௨)

கூடினர்யாரையுமங்கவர்தன்மைகுறித்தண்ண
னீடியபூசனைசெய்தபருப்பொடுநெய்தேன்பா
லோடியலைவகையுண்டிமணிக்கலமுடைபொன்பூ
ணேடியவேனவுநல்கிமகிழச்சியினிறைவித்தான. (கங)

அச்சபையூடிரயிப்பியன்மைந்தரறத்தாறரு
லெச்சமுடைத்தவசிட்டனைமுன்னவரொதிர்காணூஉ
விச்சையின்வல்லுநரிங்கிவர்போலிலர்வேறெனவு
வுச்சிதுளக்கினர்தொக்கவர்யாருமுவப்புற்றூர். (க௪)

ஆயிடைநீடுபராவசுவேள்வியதிறசில்ல
மேயசெயற்புரிவுற்றனன்மூனரும்வேலைக்கட்
சாயமகப்பணியீற்றிலகப்பணிதானுடிப்
போயினனாசிரமத்தொருதான்றனிபுரையில்லான். (க௫)

ஏகுழிமாலிருண்மல்கியகாட்டினிலேணத்தோ
லாகமறைப்பவிருந்திடுதந்தையையறியானாய்
வேகவினைக்கொள்விலங்கிதுகொல்லும்விரைந்தென்று
வாகைபுனைந்தபராவசுசித்திரைமயலாலே. (க௬)

டய்ந்துயிர்வாழ்தல்பொருட்டுரயிப்பியனுடல்செற்றூன்
வந்தனையைத்தெரிவுற்றபினெந்தையைவதைசெய்தே
னிந்தமறக்கினியென்செயலென்றமுதிடர்கூரா
வந்தவினைக்கடனாற்றுபுபின்னையவன்றன்பால். (க௭)

சென்றுணரா துயிர்தாதையைவாட்டியசெயல்சொற்றா
னன்றவனாகம்வெதும்பியிடர்க்கடலாழ்ந்திட்டா
னின்றபராவசுவாங்கிளவன்முகநேர்நோக்கி
யொன்றுரைகேண்மதியெம்பியெனாவிஃதுரைசெய்வான். (௧௮)

வாம்பரிமன்னனிழைத்திடுசத்திரமகமாற்றற்
கோம்படைசெய்தனமிப்பணிமுற்றுதலுன்றனா
லாம்பரிசன்றறியாதுயர்தாதையையடுபாவம்
போம்பரிகாரமுனாற்றலுமுள்ளம்புரிகிற்கும். (௧௯)

ஒல்லையினீவிரதங்கொளல்வேண்டுமொருவேறா
யெல்லையில்சத்திரவேள்விமுடிக்குதல்யான்வல்லேன்
வல்லைகொனீயெனவோதலுமன்னவன்மற்றன்னோன்
சொல்லைவினாயருவாவசுவாங்கெதிர்சொல்கின்றான். (௨௰)

பேதுறல்யான்விரதம்பிரமக்கொலைபிரிவெய்த
வேதமிலாவகைசெய்குவல்சத்திரவெச்சத்தை
நீதவறின்றிமுடித்தியெனாமகனிலைநீங்கிப்
போதுதல்செய்தனன்முன்னவன்வேள்விபுரிந்துற்றான. (௨௧)

வேறு.

ஆங்கணீத்தகல்பின்னவனாண்டுபன்னிரண்டு
நீங்கிடாவிரதம்பிரமக்கொலைநீங்கும்
பாங்கிலாற்றுபுதகையொடும்வேள்வியிற்படர்ந்தா
னோங்குமுன்னவன்கண்டவனரசனோடுரைப்பான். (௨௨)

தலைவகேளருவாவசுத்தீனிவன்பிரமக்
கொலைபுரிந்தவன்சத்திரவேள்விசேர்கொள்கை
யிலையிவன்றனையிக்கணேநீக்குதியின்றே
னிலைமைசான்மகம்பலித்திடாதென்றனனிருபன். (௨௩)

இரவினீள்வனத்தையணைத்தான்கொடீங்கிரிய
விரதமாற்றியதம்பியர்க்குரைத்திடும்விரோத
வரவுதேர்கிலன்மன்னவன்மாமகச்சாலை
யொருவியேகெனவாங்கருவாவசுவுரைப்பான். (௨௪)

யானிழைத்திலனிப்பிரமக்கொலையென்முன்
னானிழைத்தனன்றன்பழிபாறிடத்தனக்கா
வானநோன்பியானாற்றினேனாறிரண்டாண்டு
மானவேலவமற்றிதுபடிறெனமன்னன். (௨௫)

ஆர்வமுண்மையாற்பராவசுமேற்பழியாயான்
பேர்வைநீயெனப்பின்னருமிவனையேபிரித்தான்
சார்விலாதகறரணிகாத்தளிக்கினுந்தம்பாற்
சேர்வையோர்ப்புரந்தளிப்பதுமன்னவர்செயலே. (௨௬)

நிருபனீத்தபினந்தணர்யாவருநீத்தார்
வெருவுகூரருவாவசுவேறொருவனம்போ
யொருவராற்றருந்தவமுதிறில்பகலுஞற்றிப்
பொருவில்பானுவைநோக்கியோர்நோன்பதுபுரிந்தான். (௨௭)

நோன்பிறலிவனேந்தரும்பரிசினைநோக்கி
வான்பெருஞ்செயற்கரியதாந்திருவுளமகிழ்ந்து
தேன்பிறங்குதாரிந்திரன்முதலினோர்செறியத்
தானபுகுந்தனன்றரணியில்லருசீர்த்தரணி. (௨௮)

நஞ்சமில்புவிக்கொருதனிநாட்டமாய்த்தலைகெட்
டெஞ்சமாலிருளெழுதருமிரவியைக்காணூஉக்
கஞ்சமாமலர்மலர்த்திடுமவன்கழற்கஞ்சம்
வஞ்சமில்லருவாவசுவாழ்த்தினன்வணங்கி. (௨௯)

வணங்கிநின்றிடும்மாயிப்பியன்மகன்முகந்தெரிந்து
பிணங்கிறேவரும்பானுவும்பேசுவார்பிள்ளா
யிணங்குநின்பிரமசரியநிலைமையாலிழைக்குங்
குணங்கொண்மாதவக்கொள்கையான்மறைபயில்குறிபபால். (௩0)

புனிதனையினைபராவசுப்பொய்ம்மொழிபுகன்று
தனியகற்றவும்பொறுத்தனைதந்தையைக்கொன்ற
துனியொருங்கரீள்விரதமுமற்றவன்றனைச்சுட்டி
நனிபுரிந்தனைநவையுனக்கென்கொலோநவில்வார். (௩௧)

[illegible]னிலுன்றனைக்கொள்ளுதுந்தள்ளுதுமவனை
நீவரம்பெறவேண்டியநிகழ்த்துதியென்றார்
தேவருஞ்சுடர்த்திவாகரச்செல்வனுஞ்சிந்தை
நோவுதீரதருவாவசுவவர்க்கெதிர்நுவல்வான். (௩௨)

ஐயனாருயிர்பெற்றெழுமவ்வரமருளிச்
செய்யவேண்டுவலெனறனனீநதுபின்றேவர்
பொய்யிலாயினமொருவரங்கேளெனப்புகன்றார்
மையறீரருள்சேரருவாவசுவகுப்பான். (௩௩)

தன்னையன்றனைத்தன்கையாற்றடிந்தவத்தவறு
முன்னையோனையும்விடவருள்வீரெனமொழிந்தான்
பனனுவாரவர்தாதையாம்பனவனைக்கொன்றாற்
கென்னையோபரிகாரம்யாமியம்புவதினியே. (௩௪)

பெற்றவந்தணனுருயிர்கொன்றவப்பிழைதான்
மற்றொருத்தர்செய்தவத்தினன்மாறுமோமைந்தா
சொற்றிடப்புகிற்றானறவமாற்றினுநதொலையா
திற்றெனச்சொலுந்திறமிலோம்யாம்பரிகாரம். (௩௫)

என்னவோதியதேவரையெதிர்குறித்தேத்திப்
பின்னுமாங்கருவாவசுப்பேசுவான்பெரியீர்
முன்னுறும்பெருந்தகைமையாலுய்யவென்முன்னோ
னென்னைவெஃகியோருபாயநீரியம்புமினென்றான். (௩௬)

அவர்நெடிப்புறச்சரணமுற்றிருந்துணர்ந்தவாசி
யுவரியீன்கலையிராகவனொளிர்திருக்கரத்துத்
தவர்கொள்கோடியென்றொருபுனலுண்டதன்றகைசார்
யெவராளப்பவரில்லைமற்றதுதனக்கெல்லை. (௩௭)

வரமளித்திடும்வரம்பிலாவறம்பலவழங்கும்
பிரமகத்திதேம்பிரசமுண்பெரும்பவமரும்பொன்
கரவுநீள்குருதற்பகமனங்கலப்பென்னப்
பரவுபாதகமைந்தையும்வல்லையிற்பாற்றும். (௩௮)

நாட்டமின்றியேபடியிணுமப்புனலுணும்
வீட்டில்வைத்திடும்வெங்கனூரகிவைவிளையா
கூட்டுமெய்ப்பொருட்காமமுங்கண்ணுதல்கயிலைக்
கோட்டிலேறிடுங்கோசலைமகன்றனுக்கோடி. (௩௯)

முரணுலாநதனுக்கோடியென்றுரைத்திடின்முக்கா
லாணமாயவற்கறம்பொருளின்பமவீடளக்கு
திருணைநீக்கும்பிப்பழியிந்தனுக்கோடி
சரணமாவடைந்தாடினுலொழியுமுன்றமையன். (௪0)

மந்தணபபொருளனக்கிறுவகுத்தனமென்று
வந்தரத்தவர்தாமறைந்தந்தரம்போனு
ரிந்தவாற்றடைவடையவும்இளையவனெய்தி
முந்துநீத்திடுபராவசுத்தனுடனமொழிந்தே. (௪௧)

அண்டர்சூழ்தனுக்கோடியினன்னவன்றன்னைக்
கொண்டிடன்படார்நகரியசங்கற்பமுங்கூறி
வெண்டிரைப்புனல்வீழ்ந்தமிழ்ந்தெழுந்திடும்வேலைக்
குண்டலம்பிறந்கிட்டதோரவடிவிலாக்கூற்று. (௪௨)

மாண்பராவசுகேண்மதிந்தையைவதைத்த
வீண்பெரும்பவநரகினில்வீழ்த்திடாவண்ணஞ்
சேண்படர்ந்ததென்றுவிறுயச்சிந்தைநோய்தீர்ந்து
கோண்புணர்ந்திடாவிளவலோடுளங்களிகூர்ந்தே. (௪௩)

சராசனப்பெருங்கோடியைத்தலையினுல்வணங்கி
யிராமநாதனையிணையடியிறைஞ்சிநின்றேத்திப்
பராவசுப்புகழ்த்தம்பியுந்தானுமாய்ப்பயந்தோன்
விராவுமாசிரமந்தனைமேவினர்விருப்பால். (௪௪)

மாய்ந்ததாதையுமெழுந்தனன்மைந்தனைக்கண்டா
னுய்ந்தமூவருமாயிடையின்பமுற்றமர்ந்தார்
சாய்ந்தமாண்டனுக்கோடியிலாடியதகையா
லீந்துளாரருள்பராவசுவிடத்திலாங்கெவரும். (௪௫)

வேறு.

எற்பராவருட்போதவறத்தினீரிப்பராவசுப்பாவமொழித்தவா
றற்பினுலுமக்காகவிறறினேமற்பமார்சுரைப்பானமுதற்கனூர்
பொறபிலாவினைத்திமைகணத்திலேபுக்கபாலுமுற்சேரிருளொப்பவே
கற்பரேலிசைக்காதிலடைப்பரோற்கைப்புருதவிக்காதையகற்றுமே. (௪௬)

பராவசுச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௨௦௦௫.

---

# கவிசம்புச்சருக்கம்.

---

ஆங்கண்மீளவுஞ்சூதமாமுனியழிவில்பண்ணவர்குழுவைநாடியே
தாங்குவார்தனுக்கோடிதீர்வளஞ்சாற்றுவானெடுத்தேற்றமாதவீர்
நீங்கள்வம்மினோகேண்மினீரொருநீடுதெண்டிரையாடைவையமேற்
பாங்கிலோர்நரியோடுநண்புதான்பண்டொர்வானரங்கொண்டுவைகிடும். (க)

அனறுமாறுடமவையிரண்டுமுன்னந்தநாளினுமளவில்கேண்மையா
லொன்றிவாழ்ந்ததம்முண்மைதேர்தலாலுருவம்வேறுவேறுகமாறியுந்
தொன்றுநாடியேதோழமைக்கொளுந்தொடர்புநீங்குருசுடலைதன்னிலே
நன்றுதாங்களித்துறையும்வேலையினரியைநாடிவானரநவிற்றிடும். (உ)

யாதுபாவநீமுன்செயற்றினையிமமேவிறந்திட்டபேர்கடங்
கோதுசேர்பிணத்தசையருந்தவாய்கூறுசம்புநீயென்றுகூறது
மாதிதேர்வுநீஇயிகலனுங்கூதற்கறையுமுள்ளவாறந்தநாளியான்
வேதநூல்களைகண்டவிப்பிரன்வேள்வியோடெலாவிதியுமோர்ந்துளேன். (ங)

மல்லுவிறவசன்மாவெனுமமோர்மறையவன்றனக்குதவிவாசகஞ்
சொல்லியீந்திலேன்றேடமன்னதாற்சுடுவனத்தழன்றடியருந்துகே
னில்லையென்றிடாதேவராயினும்விடுதல்செப்பியேயீந்திடாவொனி
லல்லல்கூர்நரியாவரப்பொருளற்பமாயினுமதிகமாயினும். (ச)

நாடிநல்குவோமெனாறுநல்கிடார்நச்சும்பாவையுநாசமாயிடும்
பேடிபாள்மகப்பேறிலாமைபோறபிறவிபத்திலாமறமுடன்கெடுங்
கோடியென்றுவேதியனையொன்றுதன்கொடைபுரிந்திடாக்கொண்டபாதகம்
பஃடில்வாம்பரிமேதநூற்றினும்பாழிடாவெனக்கென்றுபாறுமோ. (ரு)

ஆகையானரியாவதுண்மையேயபந்தனுளருக்கருள்வழங்கியே
யீகைசெய்திடாருணர்வின்மேலையோரீதுமென்றதங்கிதல்வேண்டுவா
ரோகையாலெனுவோதியேநரியொன்றுகேள்கவியெனறுகூறிடு
நீகுரங்குருவானதென்கொலோநீடுபுட்குலஞ்சாடுகின்றியால். (சு)

நவிலுகென்றலும்வேதநாதனென்னுமம்விச்சுவநாதனல்கினோ
னவமில்பேர்கமலாலயம்மனைக்கந்தனுளனந்தநாளினு
மிவறனண்பினேம்யானுமீயுமீயிம்துணர்ந்திடாயானுணர்ந்துளேன்
சிவனையர்ச்சனைசெய்ததன்மையாற்றெரியுமுற்பவச்செயலெனக்குநாள். (எ)

கலைகொள்வேதியன்கறிமைமுன்னிபான்கரவுசெய்தவக்கறைவிடாமையா
லலைகொள்வானரமாயினேன்மறையாளர்தம்பொருளபகரிக்கொணு
விலையதற்குமேர்மிக்கபாதகமிருளுலாங்கடுத்தனையருந்தினோர்க்
கொலைசெயும்புவியமரர்தம்பொருள்குலமடங்கலுந்தொலைவுசெய்திடும். (அ)

அம்புவிக்குலத்தேவர்பண்ணியமபகரித்தவனளவையில்லநாட்
கும்பிபாகமுற்றெஞ்சுதீமையாற்கோடரத்துருக்கோடலுண்மையா
லிம்பரும்பர்தங்கூலம்வவ்விடாரியல்புணர்ந்துளோரிகுப்பிறப்பினோர்
தம்புறஞ்சொலார்குறைகினைந்திடார்தவறுசெய்யினுந்தாம்பொறுப்பரோ. (கூ)

அரிவைமிக்கவலையன்மாரினுமாறலைத்திடாளன்புகூறியே
புரிவுசெய்தலார்பொருளும்வௌவுவாள்பூவையன்னவள்பொதுவின்மேவினாள்
பரிவுகூர்மனச்சுமதிபோற்றினான்பாவைதானிலம்பாட்டினாளெனாத்
திரிபின்மாண்பொருட்டிருடிநல்கியேதெரிவைதோள்புணர்செயலினீடினான். (உ0)

முருகலர்க்குழற்புளினமாதொடுமோகமோவிலான்போகமேவுவா
னொருகலத்திலுண்டுண்ணொணாறவுணவுமற்றவளோடருந்தினான்
றிருகலக்கணோடுறையுமிந்தநாட்டிருடல்வெஃகியேயருடிரிந்திடும்
பொருகலக்கமில்வேடர்தம்மொடும்போதுவான்கொள்வான்வேடம்வேறரோ. உக

வேறுவேடமார்வேடர்போலவேவிறலிலாடர்தம்வேடமேவியே
யாறுசெய்கையானில்லிடம்புகுந்தவனதாவியும்பொனீட்டமும்
பேறுகொண்டுதான்பெருகுகாதலாற்பிறைகொணெற்றியாணிறைமதுப்புலா
றூறுமாம்பலாள்புளினமின்னனாணண்ணுமவ்விடநண்ணினனரோ. (உஉ)

வேறு.

இரியவருமவன்பின்னர்சதிணியிருளிற்காவாம
லெரிகுஞ்சிவிளக்கேந்தியிழைக்குமறந்தருவதுபோற்
கரியதுகின்மருங்கசைத்துக்கடுங்குரலாறநிசகலக்கிப்
பெரியகொலைப்பிரமகத்திபிறறொடர்ந்துபடர்ந்ததுவால். (உங)

பிற்றொடர்ந்துவெருவரல்செய்பிரமகத்திதனக்கஞ்சிச்
சொற்றொடர்மாநிலமுழுதுஞ்சுழன்மருத்திற்றடுமாறி
நற்றொடர்பின்வானரமேநரியேமற்றவனநாண்
முற்றொடர்பாலொருபகற்றன்மூதூரைவந்தடைந்தான் (உச)

வந்தவன்றன்றாதையடிவணங்கிமனமருளுற்றே
னெந்தையெனைப்புரவென்றானீன்றவனுமருள்பெருகிச்
சிந்தையினிலச்சமுறேல்சிறுவவெனமருங்கழைத்துப்
புந்திகொடண்ணளிபுரியப்புகுந்தனனப்பொழுதின்கண் (உரு)

பெற்றவனைமுகம்பார்த்துப்பிரமகத்திநீயிவனைப்
பற்றியருள்புரியற்கபார்ப்பானையுயிர்கொன்று
னற்றமிகுஞ்சுரைகுடித்தானாடகக்கள்வனுமானான்
முற்றுமிவன்செய்தவெலாமுடிவிலதிபாதகமே. (உகா)

தன்றனைமுன்சுமந்தளித்ததாய்தனக்குந்தந்தையெனு
முன்றனக்குமில்லவட்குமுதவலிலாப்பெரும்பாவி
யின்றிவனைக்கைப்பிடித்தாலிவனளவன்றீங்குனையுங்
கொன்றிருவர்மாதரொடுங்குலமுழுதுங்கொலைசெய்வேன். (உஎ)

ஒழிக்கிலுமக்கிடர்செய்யேனொருவனுக்காவொருகுடும்ப
மழிக்குமதுமரபன்றாலறப்பனுவலாய்ந்துளையாற்
கழிக்குமதேகடனெனலுங்கலைமறையோன்கடிதனைப்பார்த்
திழிக்குநெறியவனெனினும்யான்பயந்தமகவன்றே. (உஅ)

தருக்குமுயிர்தானிழந்ததனயரவர்க்கணைந்தழுதே
யுருக்கியுடலுடன்சாதற்கொருப்படுவருலகுள்ளோ
ரிருக்குமகவிறந்திடுதற்கிசைந்திடுமாறெவன்கொல்லோ
பெருக்குமகக்காதலெனைப்பிரிகிலதென்செயவென்றான். (உகூ)

விதிமரபுமாசிரமமெய்ந்நெறியும்விடுத்தழிந்த
பதிதனைநீவிடுதியிவன்பரிசனமுந்தரிசனமு
மதிகபவமாக்கிடுமென்றறைந்தவனையருள்செய்தோ
னெதிர்கரங்கொண்டறைந்ததுடலென்புநெறுக்கெனமுரிய. (௩௦)

பிடித்தகொடும்பிரமகத்திபிறங்குநெடுங்கையதனு
லடித்திடலுமன்னோகோவையாகோவெனவலறித்
துடித்துநிலத்திடைவீழ்ந்தான்றுணைவியுடன்பயந்தோரு
முடித்ததுயிரெனக்கலங்கிமுகத்தறைந்துமிகக்கலுழ்ந்தார். (௩௧)

பழங்கணிதுநிகழ்ந்திடுங்காற்பசுபதிதன்வடிவாருந்
தொழுந்தகையதுருவாசன்றன்னினன்னவன்மனையி
லெழுந்தவெச்சதேவனுஞ்சென்றிருடியருடருகழற்கால்
விழுந்திறைஞ்சிமகப்பொருட்டோர்விண்ணப்பஞ்செய்திடுவான். (௩௨)

கற்றைநெடுஞ்சடைமவுலிக்கண்ணுதறன்கலையுருவா
நற்றவநீநினைக்காண்டனன்றியிலார்க்கிலையாகு
மற்றெனொருமகனருந்திமதுமறையோற்கொன்றிழைத்தான்
பொற்றிருட்டும்பிரமகத்திபுகுந்ததவன்றனைக்கொல்ல. (௩௩)

வெண்படரும்பிரமகத்திவினையொருமூன்றுடன்பாற
வன்புபுரிந்துபாயநெறியஃதறைவாயல்லையெனி
லென்புதல்வனிவனொருவனிறக்கின்மரபிலையாகுந்
தென்புலத்தார்கடனீராதிருவருள்செய்தருளென்றன். (௩௪)

துருவாசனதுகேட்டுத்தூமறையோன்சுதற்கிரங்கிக்
கருவாசமருளகற்றுங்கனைகழற்காற்கனகநிரப
பெருவாசமல்லிதழிப்பிஞ்ஞகனைப்பெரும்போது
மருவாசங்கொளவிதியமலரிருந்திவகுத்துரைப்பான். (௩௫)

உன்மகன்செய்பவங்கொடியவொருபதினுயிரம்வகையாற
சொன்மறைநூற்பரிகாரஞ்சூழ்ந்திடினுமதுதீர்த
லின்மையதுக்கொருவகைகேள்யமதிசையில்ராகவன்கை
வினமருவும்பெயர்க்கோடிவிரிநீரிலாட்டுவித்தால். (௩௬)

பிள்ளையவன்றனைத்தொடுத்தபிரமகத்திபிரிந்திடுமுன்
விள்ளுநெறிவிரும்புதுருவிநீதனெனவொருமறையோன
கள்ளவிழுங்குழற்குரவன்காதலியைக்கலந்தபவந்
தள்ளினனித்தனுக்கோடிதனிலாடுந்தவவலியால். (௩௭)

என்றுதுருவாசமுனியியம்பவெச்சதேவனுளந்
தோன்றுமகிழ்வுடன்கேட்பானொருமுகவேதனையனையாய்
துன்றுதுருவிநீதனெனச்சொல்லியவன்யார்தோன்றல்
குன்றனையாயவன்குரவன்குலமனையாட்புணர்ந்ததெவன். (௩௮)

வளர்ந்ததலைத்தனுக்கோடிவந்துபடிந்தவன்பாவங்
களைந்ததெவனவையறியுங்காதலுளேன்கலைவல்லோய்
விளைந்தவகைவிளம்பெனலும்விரித்துரைப்பான்றுருவாசன்
றளைந்தபுனற்றிரைப்பொருநைசூழ்பாண்டிநன்னாட்டில். (௩௯)

எண்ணினுடனெழுந்துணர்ந்தானித்துமவாகன்பெய[illegible]
லண்ணல்குலத்தநரணன்முனவன்மனைவியமரேச
ருண்ணமுதினுருசிக்குமுருவுருசியவளும்பல்
பண்ணுதுருவிீதனவன்பாலகனும்பருவத்தில். (௪0)

மாண்டனனித்துமவாகன்மற்றவறசுமாரணத்தற்
பூண்டவினைக்கடன்முடித்துப்புத்திரருமனையுமா
யாண்டிருந்தாரதன்பின்னராரிரண்டுவருடமழை
மூண்டுபொழிமுகின்மாறமுழுதுயிர்கள்பசித்தனவால். (௪௧)

கொடைமடம்பட்டவர்வழங்குங்கொள்கைதவிர்சிறுவிலைநா
ளடைதலுமேமோகனனுதனையுடனவனெ
மடையுதவுமணிச்செய்தென்மாடுறுநாடதிற்சென்று
றுடையதனைப்பயந்தவளோர்பிள்ளமுவப்புறறிருந்தான். (௪௨)

பின்றையவனொருவைகறபிறிதுபிறப்பினிற்புரிந்த
கன்றியதீவினைவயத்தாற்காமசாக்கிலக்காகி
யன்றமரபெனபபயந்தாளடக்கவடங்காளவள்பாற்
சென்றமுறைதிரிந்தவினைசெய்தனனச்சிறியோனே. (௪௩)

மறுங்குறுயாமதனவிடாயமாறியபின்னமர்ந்தனவன்
கலங்கழிதாய்மணிமுலையிற்காமபபாலுலைடமையைப்
புலங்கொடுதானமுதிரங்கிப்பொருட்பாலனைநினைந்தனறு
வலங்கருதானதுதிாகசமறந்துபபாறனையுமலர்வானை. (௪௪)

ஊருமவற்றரவமெனவுலகின்மிசைநடப்பவற்றுட்
கூருகிர்வாளுழுவையெனக்கொடியவினைத்தலையின்றே
றொனக்கிங்கிணையாவாரறங்கடைநின்றார்மமிற
பாரிலினமுண்டுடலம்பரித்திடவும்வேண்டுமோ. (௪௫)

அன்னையிவளன்றிலத்தாயிழையார்வேறிலரோ
மின்னனையபரத்தையர்சாமவேரோடுமவ்விதனரோ
பின்னையிதிற்பிறரிலலம்பிழைத்தாலும்பிழைப்புண்டா
மென்னையிதற்குபாயமினியாரருள்கூர்ந்தெனைக்காப்பார். (௪௬)

நாடுவதென்வேறிருந்துநானினிப்போயகற்றவர்க
ளோடுபுகன்றிதவினையொழிக்குமவகைகேட்பனெனுக்
கோடுதுருவிீதனவன்குலமுனிவாருழுச்சாமம்
புரடுதபோவனத்தணுகிப்பண்ணவர்தாள்பணிந்திசைப்பான். (௪௭)

ஆயையவலிதனைநதவினைய துயிர்தற்சானதொரு
தூயநெறியுமைமின்கடொலைமறைமுறையுணர்நதீ
ரேயுமரண்பிறிதில்லேனிறத்தயிதனபொருட்டெனினு
மாயுமதறற்கன்படுவனவாய்மையிஃதென்றுரைத்தான். (௪௮)

செப்புமொழிகேட்டவரிற்சிலரிவனைத்தெரிந்தாலும்
பொய்ப்பவம்வநதற்குமெனப்பொருவிலருட்கண்புதைத்தா
ரொப்பிறருவிீதனுடனுரைத்தாலும்பாதகமென்
றப்பெரியோர்தமிற்சில்லோரதற்குவிடையறைந்திலரால். (௪௯)

